

## க.பொ.த. (உ.தர)ப் பரீட்சை - 2013

# மதிப்பீட்டு அறிக்கை

# 33 - கணக்கீடு





ஆய்வு அபிவிருத்திக் கிளை
தேசிய மதிப்பீட்டிற்கும் பரீட்சித்தலுக்குமான சேவை
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்


Download Past Papers at : www.freebooks.lk

# க.பொ.த (உ.தர)ப் பரீட்சை - 2013

# மதிப்பீட்டு அறிக்கை

# 33 - கணக்கீடு




**ஆய்வு அபிவிருத்திக் கிளை**
**தேசிய மதிப்பீட்டிற்கும் பரீட்சித்தலுக்குமான சேவை**
**இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்**

Download Past Papers at : www.freebooks.lk

## அறிமுகம்

கல்விப் பொதுத் தராதரப் பத்திர உயர் தரப் பரீட்சையானது இலங்கையின் உயர்மட்ட இரண்டாம் நிலைக் கல்வியின் இறுதிச் சான்றிதழ்ப் பரீட்சையாகும். உயர்மட்ட இரண்டாம் நிலைக் கல்வியின் இறுதியில் மாணவர்களின் அடைவு மட்டத்தைச் சான்றுப்படுத்தல் இப் பரீட்சையின் முக்கிய நோக்காக இருந்த போதும் தேசிய பல்கலைக்கழகங்கள், வேறு கல்வி மற்றும் தொழில் பயிற்சி நிறுவனங்கள், தேசிய கல்வியியல் கல்லூரிகள் என்பவற்றுக்குத் தகைமையானோரைத் தெரிவு செய்தலும் இப்பரீட்சையின் பெறுபேறுகளின் அடிப்படையில் இடம்பெறுவதால் அடைவுப் பரீட்சையாகவும் தேர்வுப் பரீட்சையாகவும் க.பொ.த (உ.தர)ப் பரீட்சை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த தன்மையைப் பெறுகிறது. மேலும் மூன்றாம் நிலையில் தொழிலில் பிரவேசிப்பதற்கான தகைமையை சான்றுப்படுத்தும் பரீட்சையாகவும் இது ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. இப்போது இப்பரீட்சைக்காக 2013 ஆம் ஆண்டில் 209906 வரையிலான பாடசாலைப் பரீட்சார்த்திகளும் 31723 வரையிலான தனிப்பட்ட பரீட்சார்த்திகளும் தோற்றியிருந்தனர்.

இப்பரீட்சையில் உயர் அடைவு மட்டத்தைப் பெறுவதற்காக மாணவர்களும் அவர்களின் எதிர்பார்ப்புகளை நிறைவு செய்வதற்காக ஆசிரியர்களும் பெற்றோரும் பெரிதும் முயற்சி செய்கின்றனர். இந்த மதிப்பீட்டு அறிக்கையை அவர்களின் அந்த எதிர்பார்ப்புக்களை நிறைவேற்றுவதற்கு உதவும் பொருட்டே இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் தயாரித்துள்ளது. இந்த மதிப்பீட்டு அறிக்கையில் உள்ளடக்கப்பட்ட தகவல்கள் பரீட்சையை எதிர்பார்த்திருப்போர், ஆசிரியரிமார், அதிபர்மார், ஆசிரியர் ஆலோசகர்கள், பாடப் பொறுப்புக் கல்விப் பணிப்பாளர்கள் பெற்றோர், கல்வி ஆய்வாளர்கள் அனைவருக்கும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

இந்த மதிப்பீட்டு அறிக்கை I, II, III என மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது.

க.பொ.த (உ.தர) கணக்கியல் பாடத்தின் நோக்கம் பாட அடைவு பற்றிய தகவல்கள் இந்த அறிக்கையின் பகுதி I இல் அடங்கியுள்ளது. இப்பகுதியில் பாடத்திற்கு தோற்றிய பரீட்சார்த்திகளின் எண்ணிக்கை, அவர்கள் தரங்களைப் பெற்றுள்ள விதம், மாவட்ட மட்டத்தில் பாடசாலைப் பரீட்சார்த்திகள் தரங்களைப் பெற்றுள்ள விதம் வகுப்பாயிடைக்கேற்ப புள்ளிகளின் பரம்பல் ஆகிய பாட அடைவு பற்றிய புள்ளிவிபரத் தகவல்களும் கணக்கியல் பாடத்தின் வினாத்தாள் I, II என்பவற்றில் வினாக்கள் தெரிவு செய்யப்பட்ட விதம், அவ்வினாக்களுக்கும் அவ்வினாக்களின் பகுதிகளுக்கும் புள்ளிகள் பெற்றுள்ள விதம் என்பன பற்றி விரிவாகக் குறிப்பிடும் பாட அடைவு பற்றிய பகுப்பாய்வும் உள்ளடக்கப்பட்டுள்ளன. க.பொ.த (உ.தர)ம் - 2013 பரீட்சையில் கணக்கியல் பாடத்தின் வினாத்தாள் I, II என்பவற்றுக்கான வினாக்கள் அவ்வினாக்களுக்கு பரீட்சார்த்திகள் விடைகள் அளித்திருந்தமை பற்றிய தகவல்கள் இந்த அறிக்கையின் பகுதி II இல் அடங்கியுள்ளன. அதில் வினாத்தாள் I, II என்பவற்றின் வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகள், புள்ளி வழங்கும் திட்டம், விடைகள் அளித்தமை பற்றிய அவதானிப்புக்கள், முடிவுகள், பாட அடைவை மேம்படுத்துவதற்கான ஆலோசனைகள் என்பனவும் உள்ளடக்கப்பட்டுள்ளன.

இலங்கைப் பரீட்சைத் திணைக்களத்தின் ஆய்வு அபிவிருத்திக் கிளை மூலம் விடைத்தாள் மதிப்பீட்டில் ஈடுபட்ட பிரதம பரீட்சகர், மேலதிக பிரதம பரீட்சகர், உதவிப் பரீட்சகர்கள் ஆகியோரால் முன்வைக்கப்பட்ட தகவல்கள், அவதானிப்புகள், கருத்துகள், ஆலோசனைகள், மரபு ரீதியான சோதனைக் கோட்பாடு (Classical Testing Theory) மற்றும் உருப்படித் துலங்கள் கோட்பாடு (Item Response Theory) என்பவற்றைப் பயன்படுத்தி பரீட்சார்த்திகளின் துலங்கல்களைப் பகுப்பாய்வு செய்தலினூடாகப் பெறப்பட்ட தகவல்கள் என்பன இந்த மதிப்பீட்டு அறிக்கையை தயாரிப்பதற்கு ஆதாரமாகக் கொள்ளப்பட்டுள்ளன.

வினாப்பத்திரத்திலுள்ள ஒவ்வொரு வினாக்களுக்கும் விடையளிக்கும்போது பரீட்சார்த்திகள் கவனத்தில் கொள்ள வேண்டிய விடயங்கள், கற்றல் - கற்பித்தல் பணிகள் பற்றிய கருத்துகள், ஆலோசனைகள் என்பனவும் இந்த அறிக்கையில் பகுதி III இல் அடங்கியுள்ளன. பல்வேறு தேர்ச்சிகள் அத்தேர்ச்சி மட்டங்களை அணுகுவதற்கான கற்றல் - கற்பித்தல் செயன்முறையை ஒழுங்கமைக்கும் விதம் என்பன தொடர்பாக இந்த அறிக்கையானது பெரிதும் துணை புரியும் என நம்புகின்றேன்.

எதிர்காலத்தில் தொகுக்கப்படும் மதிப்பீட்டு அறிக்கைகளின் பண்புத்தரத்தை மேம்படுத்தக்கூடிய பயன்தரும் கருத்துகள், ஆலோசனைகள் என்பவற்றை எங்களுக்குச் சமர்ப்பிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த அறிக்கையைத் தயாரிப்பதற்குத் தேவையான தகவல்களை வழங்கிய பிரதம பரீட்சகர், மேலதிக பிரதம பரீட்சகர், உதவிப் பரீட்சகர்கள், ஊக்கத்துடன் பங்களிப்பு வழங்கிய குழு உறுப்பினர்கள், பொறுப்புடன் கடமையாற்றிய இலங்கைப் பரீட்சைத் திணைக்கள அலுவலர்கள், பணிக்குழுவினர் ஆகியோருக்கும் இத்தொகுப்புக்கான நிதி அனுசரணை வழங்கி எதிர்கால அறிவை மையமாகக் கொண்டு பாடசாலை முறைமையை மீளமைக்கும் செயற்றிட்டத்துக்கும் (TSEP - WB) எனது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன்.

டபிள்யூ.எம்.என்.ஜே. புஷ்பகுமார
பரீட்சை ஆணையாளர் நாயகம்.

2015 சனவரி 19
ஆய்வு அபிவிருத்திக் கிளை,
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்,
பெலவத்தை,
பத்தரமுல்ல.



Download Past Papers at : www.freebooks.lk

| | | |
|---|---|---|
| வழிகாட்டல் | : | **டபிள்யூ.எம்.என்.ஜே. புஷ்பகுமார**<br>பரீட்சை ஆணையாளர் நாயகம் |
| ஒழுங்கமைப்பும் நெறிப்படுத்தலும் | : | **திருமதி. கயாத்திரி அபேகுணசேகர**<br>பரீட்சை ஆணையாளர்<br>(ஆய்வு அபிவிருத்திக் கிளை) |
| இணைப்பு | : | **திருமதி. நிமாலி ஹேரத்**<br>உதவி பரீட்சை ஆணையாளர் |
| தொகுப்பு | : | **திருமதி. கயாத்திரி அபேகுணசேகர**<br>பரீட்சை ஆணையாளர்<br>(ஆய்வு அபிவிருத்திக் கிளை)<br><br>**கலாநிதி டபிள்யூ.வீ.ஏ.டீ. கருணாதிலக**<br>சிரேஷ்ட விரிவுரையாளர்<br>கணக்கியல் கல்விப் பிரிவு<br>களனி பல்கலைக்கழகம்<br><br>**கலாநிதி ஹரேந்திர காரியவசம்**<br>சிரேஷ்ட விரிவுரையாளர்<br>கணக்கியல் பிரிவு<br>ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம்<br><br>**ரங்கஜீன ஹேரத்**<br>விரிவுரையாளர்<br>கணக்கியல் பிரிவு<br>ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம் |
| ஆக்கக் குழு | : | **டபிள்யு.எம். பிரேமணி பெர்னாந்து**<br>சாந்த பீட்டர்ஸ் கல்லூரி<br>பம்பலபிட்டிய<br><br>**என்.எம். நிமல் கருணாதிலக**<br>சிலா/ ஆனந்த தேசிய பாடசாலை<br>சிலாபம்<br><br>**ஐ.டி. பிரேமதிலக**<br>கா/ கரந்தெனிய மத்திய மகா வித்தியாலயம்<br>கரந்தெனிய |
| மொழிப்பெயர்ப்பு | : | **சி.எல்.எம் நவாஸ்**<br>ஆசிரிய ஆலோசகர்,<br>வலயக் கல்விப் பணிமனை<br>இப்பாகமுவ |
| கணினிப் பக்க வடிவமைப்பு | : | **சுப்ரமணியம் காஞ்சனா**<br>கணினித் தரவுப் பதிவாளர் |
| முகப்பு அட்டை வடிவமைப்பு | : | **வை.எஸ். அனுராதி**<br>அபிவிருத்தி அதிகாரி |



Download Past Papers at : www.freebooks.lk

# உள்ளடக்கம்

பக்க எண்






Download Past Papers at : www.freebooks.lk

## பகுதி I

1 **பாடக் குறிக்கோள்களும் பாட அடைவு தொடர்பான தகவல்களும்**

### 1.1 பாடக் குறிக்கோள்கள்

இப்பாடத்திட்டத்தினைப் பின்பற்றுவதனால் மாணவர்,

* கணக்கீட்டின் எண்ணக்கரு ரீதியான சட்டகம் தொடர்பிலான அடிப்படை விளக்கத்தினைப் பெற்றுக் கொள்வார்.
* கணக்கியல் நுட்ப முறைகள் தொடர்பில் பெற்ற அடிப்படை அறிவினைப் பயன்படுத்துவார்.
* கணக்கீட்டுப் பாடத்துறையில் வெளிப்படையாகக் காணப்படும் புத்தாக்கங்களை விளங்கிக் கொள்வார்.
* கணக்கீட்டுப் பாடத்துறையின் ஊடாகப் பெற்றுக் கொள்ளும் அறிவினை பல்வேறு தொழில் தேவைகளுக்குப் பயன்படுத்துவார்.
* சமூகப் பொருளாதார சூழலொன்றுக்கு வினைத்திறனாகச் செயற்படக் கூடிய முகாமைத்துவத் திறனைப் பெற்றுக்கொள்வார்.
* பல்வேறுபட்ட வணிக அமைப்புக்களின் கணக்கு வைப்பு தொடர்பிலான திறனைப் பெற்றுக் கொள்வார்.
* பாடத்துறையில் தேடியறிதல்களை மேற்கொள்வதன் மூலம் கிடைக்கும் அனுபவத்தினை எதிர்கால ஆய்வு அபிவிருத்திக் கருமங்களுக்கு பயன்படுத்திக் கொள்வார்.
* வளங்களை ஆக்கபூர்வமாகவும், வினைத்திறனாகவும் பயன்படுத்துவதற்கான தேர்ச்சியினை விருத்தி செய்து கொள்வார்.



Download Past Papers at : www.freebooks.lk

## 1.2 பாட அடைவு தொடர்பான புள்ளிவிபரத் தகவல்கள்

### 1.2.1 இப்பாடத்துக்குத் தோற்றிய பரீட்சார்த்திகளின் எண்ணிக்கை

| மொழிமூலம் | பாடசாலை | தனிப்பட்ட | மொத்தம் |
|---|---|---|---|
| சிங்களம் | 51182 | 3680 | 54862 |
| தமிழ் | 8147 | 559 | 8706 |
| ஆங்கிலம் | 1742 | 498 | 2240 |
| **மொத்தம்** | **61071** | **4737** | **65808** |

அட்டவணை 1

### 1.2.2 பரீட்சார்த்திகளினால் தரங்கள் பெறப்பட்டுள்ள விதம்

| தரம் | பாடசாலைப் பரீட்சார்த்திகள் | | தனிப்பட்ட பரீட்சார்த்திகள் | | மொத்தம் | சதவீதம் |
|---|---|---|---|---|---|---|
| | எண்ணிக்கை | சதவீதம் | எண்ணிக்கை | சதவீதம் | | |
| A | 6411 | 10.50 | 303 | 6.40 | 6714 | 10.20 |
| B | 5292 | 8.67 | 302 | 6.38 | 5594 | 8.50 |
| C | 12575 | 20.59 | 778 | 16.42 | 13353 | 20.29 |
| S | 15387 | 25.20 | 1082 | 22.84 | 16469 | 25.03 |
| F | 21406 | 35.05 | 2272 | 47.96 | 23678 | 35.98 |
| மொத்தம் | **61071** | **100.00** | **4737** | **100.00** | **65808** | **100.00** |

அட்டவணை 2

பரீட்சைக்குத் தோற்றிய பாடசாலைப் பரீட்சார்த்திகளில் ஏறக்குறைய 65% ஆனோர் கணக்கீடு பாடத்தில் சித்தியடைந்திருந்தாலும், தனிப்பட்ட பரீட்சார்த்திகளில் ஏறக்குறைய 52% ஆனோர் மாத்திரமே இப்பாடத்தில் சித்தியடைந்துள்ளமையை மேலுள்ள அட்டவணை எமக்குப் புலப்படுத்துகின்றது.



Download Past Papers at : www.freebooks.lk

## 1.2.3 மாவட்ட அடிப்படையில் முதல் முறையாகத் தோற்றிய பாடசாலைப் பரீட்சார்த்திகளால் தரங்கள் பெறப்பட்டுள்ள விதம்

| மாவட்டம் | தோற்றியோரின் எண்ணிக்கை | அதி சிறந்த சித்தி (A) பெற்றவர் | | விசேட திறமைச் சித்தி (B) பெற்றவர் | | திறமைச் சித்தி (C) பெற்றவர் | | சாதாரண சித்தி (S) பெற்றவர் | | சித்தி (A+B+C+S) பெற்றவர் | | சித்தி அடையாதோர் (F) | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % |
| 1. கொழும்பு | 9382 | 1296 | 13.81 | 863 | 9.20 | 2011 | 21.43 | 2417 | 25.76 | 6587 | 70.21 | 2795 | 29.79 |
| 2. கம்பஹா | 6056 | 616 | 10.17 | 458 | 7.56 | 1080 | 17.83 | 1467 | 24.22 | 3621 | 59.79 | 2435 | 40.21 |
| 3. களுத்துறை | 3004 | 334 | 11.12 | 274 | 9.12 | 588 | 19.57 | 712 | 23.70 | 1908 | 63.52 | 1096 | 36.48 |
| 4. கண்டி | 3512 | 274 | 7.80 | 235 | 6.69 | 666 | 18.96 | 961 | 27.36 | 2136 | 60.82 | 1376 | 39.18 |
| 5. மாத்தளை | 1013 | 48 | 4.74 | 61 | 6.02 | 133 | 13.13 | 240 | 23.69 | 482 | 47.58 | 531 | 52.42 |
| 6. நுவரெலியா | 1427 | 92 | 6.45 | 89 | 6.24 | 243 | 17.03 | 356 | 24.95 | 780 | 54.66 | 647 | 45.34 |
| 7. காலி | 2952 | 433 | 14.67 | 279 | 9.45 | 566 | 19.17 | 600 | 20.33 | 1878 | 63.62 | 1074 | 36.38 |
| 8. மாத்தறை | 2134 | 226 | 10.59 | 184 | 8.62 | 494 | 23.15 | 540 | 25.30 | 1444 | 67.67 | 690 | 32.33 |
| 9. அம்பாந்தோட்டை | 1236 | 87 | 7.04 | 91 | 7.36 | 196 | 15.86 | 309 | 25.00 | 683 | 55.26 | 553 | 44.74 |
| 10. யாழ்ப்பாணம் | 1096 | 95 | 8.67 | 79 | 7.21 | 251 | 22.90 | 308 | 28.10 | 733 | 66.88 | 363 | 33.12 |
| 11. கிளிநொச்சி | 212 | 9 | 4.25 | 17 | 8.02 | 48 | 22.64 | 73 | 34.43 | 147 | 69.34 | 65 | 30.66 |
| 12. மன்னார் | 207 | 14 | 6.76 | 12 | 5.80 | 36 | 17.39 | 56 | 27.05 | 118 | 57.00 | 89 | 43.00 |
| 13. வவுனியா | 297 | 37 | 12.46 | 25 | 8.42 | 67 | 22.56 | 67 | 22.56 | 196 | 65.99 | 101 | 34.01 |
| 14. முல்லைத்தீவு | 192 | 8 | 4.17 | 16 | 8.33 | 37 | 19.27 | 52 | 27.08 | 113 | 58.85 | 79 | 41.15 |
| 15. மட்டக்களப்பு | 784 | 111 | 14.16 | 90 | 11.48 | 195 | 24.87 | 206 | 26.28 | 602 | 76.72 | 182 | 23.21 |
| 16. அம்பாறை | 1261 | 88 | 6.98 | 105 | 8.33 | 259 | 20.54 | 339 | 26.88 | 791 | 62.73 | 470 | 37.27 |
| 17. திருகோணமலை | 663 | 50 | 7.54 | 44 | 6.64 | 110 | 16.59 | 171 | 25.79 | 375 | 56.56 | 288 | 43.44 |
| 18. குருநாகல் | 3258 | 219 | 6.72 | 198 | 6.08 | 543 | 16.67 | 759 | 23.30 | 1719 | 52.76 | 1539 | 47.24 |
| 19. புத்தளம் | 1484 | 133 | 8.96 | 120 | 8.09 | 307 | 20.69 | 379 | 25.54 | 939 | 63.27 | 545 | 36.73 |
| 20. அனுராதபுரம் | 1679 | 97 | 5.78 | 102 | 6.08 | 273 | 16.26 | 450 | 26.80 | 922 | 54.91 | 757 | 45.09 |
| 21. பொலன்னறுவை | 825 | 37 | 4.48 | 38 | 4.61 | 155 | 18.79 | 184 | 22.30 | 414 | 50.18 | 411 | 49.82 |
| 22. பதுளை | 1874 | 131 | 6.99 | 110 | 5.87 | 324 | 17.29 | 459 | 24.49 | 1024 | 54.64 | 850 | 45.36 |
| 23. மொனராகலை | 939 | 65 | 6.92 | 56 | 5.96 | 167 | 17.78 | 241 | 25.67 | 529 | 56.34 | 410 | 43.66 |
| 24. இரத்தினபுரி | 2538 | 297 | 11.70 | 224 | 8.83 | 505 | 19.90 | 611 | 24.07 | 1637 | 64.50 | 901 | 35.50 |
| 25. கேகாலை | 1696 | 119 | 7.02 | 125 | 7.37 | 325 | 19.16 | 421 | 24.82 | 990 | 58.37 | 706 | 41.63 |
| **நாடு முழுவதும்** | **49721** | **4916** | **9.89** | **3895** | **7.83** | **9579** | **19.27** | **12378** | **24.89** | **30768** | **61.88** | **18953** | **38.12** |

**அட்டவணை** 3



Download Past Papers at : www.freebooks.lk

### 1.2.4 வகுப்பாயிடை அடிப்படையில் புள்ளிகள் பெறப்பட்டுள்ள விதம்

| வகுப்பாயிடை | மீடிறன் | மீடிறன் சதவீதம் | திரள் மீடிறன் | திரள் மீடிறன் சதவீதம் |
|---|---|---|---|---|
| 91 - 100 | 421 | 0.64 | 65808 | 100.00 |
| 81 - 90 | 2845 | 4.32 | 65387 | 99.36 |
| 71 - 80 | 4882 | 7.42 | 62542 | 95.04 |
| 61 - 70 | 6175 | 9.38 | 57660 | 87.62 |
| 51 - 60 | 7796 | 11.85 | 51485 | 78.24 |
| 41 - 50 | 9855 | 14.98 | 43689 | 66.39 |
| 31 - 40 | 11405 | 17.33 | 33834 | 51.41 |
| 21 - 30 | 11221 | 17.05 | 22429 | 34.08 |
| 11 - 20 | 9185 | 13.96 | 11208 | 17.03 |
| 01 - 10 | 2014 | 3.06 | 2023 | 3.07 |
| 00 - 00 | 9 | 0.01 | 9 | 0.01 |

**அட்டவணை 4**

இந்தப் பாடத்திற்கான பரீட்சார்த்திகள் புள்ளிகள் பெற்ற விதம் மேலேயுள்ள அட்டவணையில் காட்டப்பட்டுள்ளது.

உதாரணம் : இப்பாடத்திற்கு தோற்றிய 65808 பேரில் 31 - 40 வகுப்பாயிடையினுள் புள்ளிகள் பெற்றோர் எண்ணிக்கை 33834 பேர் ஆகும். சதவீத அடிப்படையில் அது 51.41% ஆகும். 40 புள்ளிகள் அல்லது அதனிலும் குறைந்த புள்ளிகள் பெற்றோர் எண்ணிக்கை 22429 பேர் என்பதுடன் அதன் சதவீதம் 34.08.% ஆகும்.



Download Past Papers at : www.freebooks.lk

1.3 பாட அடைவு பற்றிய பகுப்பாய்வு

1.3.1 வினாத்தாள் **I** இன் அடைவு




வரைபு 1 (RD/16/05/AL) படிவங்கள் மூலம் பெறப்பட்ட தகவல்களைக் கொண்டு தயாரிக்கப்பட்டுள்ளது.

உ-ம் : மேலுள்ள வரைபிற்கேற்ப விண்ணப்பதாரிகளின் பெரும்பாலானோர் 47 ஆம் வினாவுக்கே சரியாக விடையளித்துள்ளனர். அதன் வீதம் 88% ஆகும். வினா இலக்கம் 49 இற்கு குறைந்த தொகையினர் விடையளித்துள்ளனர். அதன் வீதம் 6% ஆகும்.



Download Past Papers at : www.freebooks.lk

## 1.3.2 வினாத்தாள் II இல் வினாக்கள் தெரிவு செய்யப்பட்டுள்ள விதம்




இவ்வரைபிற்கேற்ப 1 ஆம் 2 ஆம் வினாக்கள் கட்டாய வினாக்களாயினும் அவற்றிற்கு குறைந்த பிரிவினர் விடையளிக்காமை தெளிவாகின்றது. விண்ணப்பதாரிகளுள் கூடுதலானோர் பகுதி II இல் 3 ஆம் வினாவுக்கே விடையளித்துள்ளனர். அது ஏறக்குறைய 91% ஆகும். 4 ஆம் வினாவே குறைவாகத் தெரிவு செய்யப்பட்டுள்ளதுடன், அதன் வீதம் 61% ஆகும்.

**வரைபு 2** - (RD/16/02/AL படிவத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.)

## 1.3.3 வினாத்தாள் II இல் புள்ளிகள் பெறப்பட்டுள்ள விதம்




இவ்வுதாரணத்தின் மூலம் காட்டப்படுவது 1 ஆம் வினாவுக்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகளின் அளவு 20 ஆகும். அப்புள்ளிகளில் 76% - 100% வகுப்பாயிடையில் அதாவது (16 - 20) வரை புள்ளிகள் பெற்றவர்கள் 16% ஆகும். அதேபோன்று ஒதுக்கப்பட்டுள்ள 20 புள்ளிகளில் 0% - 25% வகுப்பாயிடையில் அதாவது (0 - 5) வரை புள்ளிகள் பெற்றவர்களின் வீதம் ஏறக்குறைய 38% ஆகும்.

**வரைபு 3** - (RD/16/02/AL படிவத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.)



Download Past Papers at : www.freebooks.lk

### 1.3.4 வினாத்தாள் II இன் அடைவு




வரைபு 4 (RD/16/04/AL) படிவத்திலிருந்து பெற்ற தகவல்களின் உதவியுடன் தயாரிக்கப்பட்டுள்ளது.)



Download Past Papers at : www.freebooks.lk

## பகுதி II

## 2 வினாக்களும் அவற்றிற்கு விடையளிக்கப்பட்டமை தொடர்பான விபரங்களும்

### 2.1 வினாத்தாள் I உம் அதற்கு விடையளிக்கப்பட்டுள்ளமை தொடர்பான விபரங்களும்

#### 2.1.1 வினாத்தாள் I இன் கட்டமைப்பு

* நேரம் 02 மணித்தியாலங்களாகும்.
* 30 பல்தேர்வு வினாக்களும், சுருக்க விடையளித்தல் வினாக்கள் 20 உம் காணப்படுகின்றன.
* சகல வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும்.
* ஒரு வினாவிற்கு 02 புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் 100 ஆகும்.
* விடைத்தாள் மதிப்பீட்டின் போது ஒவ்வொரு வினாவிற்கும் 4 புள்ளிகள் வீதம் வழங்கப்படும். அதற்கேற்ப மொத்தப்புள்ளிகள் 200 ஆகும்.
* பக்கம் 25 இல் இறுதிப் புள்ளி மதிப்பிடும் விதம் தொடர்பாக காட்டப்பட்டுள்ளது.



Download Past Papers at : www.freebooks.lk

## 2.1.2 வினாத்தாள் I இன் வினா இல. 1 - 30 வரையான வினாக்கள்

1. பின்வருவனவற்றுள் எது நிறுவனமொன்றின் நிதிக் கணக்கீட்டின் பங்கினை சிறப்பாக விபரிக்கிறது ?
   (1) இது நிறுவனத்தின் கொடுக்கல்வாங்கல்களைக் கணக்குப் புத்தகங்களில் பதிகிறது.
   (2) இது நிறுவனத்தின் கொடுக்கல்வாங்கல்களை நிதித் தகவல்களாக மாற்றுகிறது.
   (3) இது நிறுவனத்தின் வருடாந்த கணக்காய்விற்காக நிதிக் கூற்றுக்களை தயாரிக்கிறது.
   (4) இது நிறுவனத்தின் முகாமையாளர்களுக்கு திட்டமிடல் மற்றும் கட்டுப்பாடு செய்வதற்கான தகவல்களை வழங்குகிறது.
   (5) இது நிறுவனத்தின் வெளிவாரி அக்கறையுடையோர் மற்றும் முகாமையாளர்கள் தீர்மானம் எடுப்பதற்கான தகவல்களை வழங்குகிறது. (………)

2. பின்வரும் கணக்கீட்டு எண்ணக்கருக்களில் எது கணக்கீட்டுச் சமன்பாட்டில் உரிமையாண்மையினை ஒரு தனித்த கூறாக இனம் காணுமாறு வேண்டி நிற்கிறது ?
   (1) தொழில் முழுமைக்கூறு (2) அட்டுறு (3) தொடர்ந்து இயங்குதல்
   (4) இணைத்தல் (5) கணக்கீட்டு காலம் (………)

3. பின்வரும் கணக்கீட்டு எண்ணக்கருக்களில் எது/ எவை நிறுவனமொன்றின் நிதிக் கூற்றுக்களில் உத்தரவாதத்திற்கு ஏற்பாட்டினை மேற்கொள்வதுடன் தொடர்புடையதாகும் ?

   A - அட்டுறு B - இணைத்தல் C - முன்னெச்சரிக்கை

   (1) B மட்டும். (2) A , B ஆகியன மாத்திரம். (3) A , C ஆகியன மாத்திரம்.
   (4) B , C ஆகியன மாத்திரம். (5) A , B , C ஆகிய எல்லாம். (………)

4. அமலன் தனது தனிப்பட்ட சேமிப்புப் பணம் ரூ 500 000 இனையும் தனது ரூ. 2 000 000 பெறுமதியான மோட்டார் வாகனத்தினையும் பாவித்து 01.04.2012 இல் வியாபாரம் ஒன்றினை ஆரம்பித்துள்ளார். தொடங்கிய முதல் மாதத்தில் வியாபார நிறுவனம் ரூ. 300 000 இற்கு சரக்குகளை கடனிற்கு கொள்வனவு செய்தது. இவற்றுள் ரூ. 50 000 பெறுமதியானவைகளில் குறைபாடுகள் இருந்ததால் திருப்பியனுப்பப்பட்டன. இக்கொடுக்கல்வாங்கல்களைப் பதிவதற்கான மூல ஆவணங்களின் ஒழுங்கு வரிசை யாது ?
   (1) நாட்குறிப்பிற்கான உறுதிச்சீட்டு, விலைப்பட்டியல், வரவுத்தாள்.
   (2) நாட்குறிப்பிற்கான உறுதிச்சீட்டு, விலைப்பட்டியல், செலவுத்தாள்.
   (3) பற்றுச்சீட்டு, விலைப்பட்டியல், செலவுத்தாள்.
   (4) வாகனப் பதிவுப் புத்தகம், விலைப்பட்டியல், செலவுத்தாள்.
   (5) வாகனப் பதிவுப் புத்தகம், விலைப்பட்டியல், வரவுத்தாள். (………)

5. வியாபார நிறுவனமொன்று ரூபா 200,000 பெறுமதியான சரக்குகளை 10% வியாபாரக் கழிவுடன் கடனிற்கு கொள்வனவு செய்துள்ளது. இந்தக் கொடுக்கல்வாங்கல்களினால் கணக்கீட்டுச் சமன்பாட்டில் ஏற்படும் தாக்கம் பின்வருவனவற்றுள் எதனால் காட்டப்படும் ?

| | சொத்துக்கள் | பொறுப்புக்கள் | உரிமையாண்மை |
|---|---|---|---|
| (1) | ரூ. 180 000 அதிகரிப்பு | ரூ. 180 000 அதிகரிப்பு | - |
| (2) | ரூ. 200 000 அதிகரிப்பு | ரூ. 200 000 அதிகரிப்பு | - |
| (3) | ரூ. 180 000 அதிகரிப்பு | ரூ. 200 000 அதிகரிப்பு | ரூ. 20 000 குறைவு |
| (4) | ரூ. 200 000 அதிகரிப்பு | ரூ. 180 000 அதிகரிப்பு | ரூ. 20 000 அதிகரிப்பு |
| (5) | ரூ. 200 000 அதிகரிப்பு | ரூ. 220 000 அதிகரிப்பு | ரூ. 20 000 குறைவு |

(………)

6. பின்வரும் தகவல்கள் வியாபாரமொன்றின் மார்ச் 2013 மாதத்துடன் தொடர்புடையது.

| விற்பனைகள் | பட்டியல் விலை (ரூ.'000) | வியாபாரக்கழிவு |
|---|---|---|
| காசு | 1 000 | 10% |
| கடன் | 4 000 | 5% |

வாடிக்கையாளர்கள் விற்பனைத் திகதியிலிருந்து 15 நாட்களுக்குள் தமது தொகைகளைக் கொடுத்து தீர்ப்பார்களாயின் அவர்களுக்கு 5% காசுக்கழிவு கொடுக்கப்படுகிறது. கடன்பட்டோர் மீதிகளில் 50% ஆனவை இவ்வாறான கழிவுகள் மூலம் தீர்க்கப்பட்டுள்ளன என வியாபாரத்தின் பதிவேடுகளிலிருந்து அறிய முடிகிறது.
பின்வருவனவற்றுள் கடன்பட்டோருக்கு கொடுத்த கழிவினைப் பதிவதற்கான சரியான நாட்குறிப்பு எது ?

| | வரவு (ரூபா) | செலவு (ரூபா) | |
|---|---|---|---|
| (1) | கொடுத்தகழிவுக்கணக்கு 95 000 | காசுக்கணக்கு | 95 000 |
| (2) | கொடுத்தகழிவுக்கணக்கு 95 000 | கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக்கணக்கு | 95 000 |
| (3) | கொடுத்தகழிவுக்கணக்கு 195 000 | காசுக்கணக்கு | 195 000 |
| (4) | கொடுத்தகழிவுக்கணக்கு 295 000 | கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக்கணக்கு | 295 000 |
| (5) | கொடுத்தகழிவுக்கணக்கு 395 000 | காசுக்கணக்கு | 395 000 |

(………)



Download Past Papers at : www.freebooks.lk

7. பின்வரும் கூற்றுக்களில் கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு தொடர்பில் எது **சரியானது** ?
(1) கட்டுப்பாட்டுக்கணக்கானது ஒவ்வொரு கடன் கொடுத்தோருக்கும் பராமரிக்கப்படும்.
(2) எல்லாக் கொள்வனவுகளும் கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் பதியப்படும்.
(3) கொள்வனவு நாளேட்டின் மொத்தத் தொகையானது கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் பதியப்படும் .
(4) கடன் கொடுத்தோரிடமிருந்து பெற்ற கழிவானது கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் பதியப்படுவதில்லை
(5) கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கானது கடன் கொடுத்தோர் பேரேட்டில் பராமரிக்கப்படும்.(.........)

- **நிறுவனமொன்றுடன் தொடர்பான பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 8 ஆம் 9 ஆம் வினாக்களுக்கு விடை தருக.**

மார்ச் மற்றும் பெப்ரவரி 2013 மாதங்களில் வைப்பிலிட்ட, வழங்கிய காசோலைகளின் சுருக்கம் பின்வருமாறு.

| **விபரம்** | **மார்ச் 2013 (ரூ.'000)** | **பெப்ரவரி 2013 (ரூ.'000)** |
|---|---|---|
| வங்கியில் வைப்புச்செய்த காசோலைகள் | 1 000 | 900 |
| வழங்கிய காசோலைகள் | 750 | 600 |

பின்வரும் தகவல்களும் தரப்பட்டுள்ளது:

| **விபரம்** | **31.03.2013 இல் உள்ளபடி (ரூ.'000)** | **28.02.2013 இல் உள்ளபடி (ரூ.'000)** |
|---|---|---|
| வைப்பிலிடப்பட்ட காசோலைகளில் வசூலிக்கப்பட்டவைகள் | 750 | 900 |
| கொடுப்பனவிற்காக சமர்ப்பிக்கப்பட்ட காசோலைகள் | 600 | 500 |
| வங்கியால் நேரடியாக பெற்ற வட்டி வருமானம் | - | 50 |
| வங்கிக் கட்டணங்கள் | 10 | 5 |
| வங்கிக்கணக்கு மீதி (வட்டி வருமானம், வங்கிக்கட்டணங்கள் சீராக்க முன்னர்) | 395 | 100 |
| வங்கிக்கூற்றின் படி மீதி | ? | 245 |

பெப்ரவரி மாதத்தில் சமர்ப்பிக்கப்படாத காசோலைகள் மார்ச் மாதத்தில் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன.

8. 28.02.2013 இலுள்ளவாறான வங்கிக் கணக்கின் சீராக்கிய மீதி எது ?
(1) ரூ. 145 000 (2) ரூ. 190 000 (3) ரூ. 200 000 (4) ரூ. 290 000 (5) ரூ. 345 000 (.........)

9. 31.03.2013 இலுள்ளவாறான வங்கிக் கூற்று மீதி எது ?
(1) ரூ. 245 000 (2) ரூ. 285 000 (3) ரூ. 295 000 (4) ரூ. 385 000 (5) ரூ. 395 000 (.........)

10. பின்வருவனவற்றுள் எது நிதிக் கூற்றுக்களைத் தயாரித்தல் மற்றும் சமர்ப்பித்தல் சட்டகத்தின் படி நிதிக் கூற்றுக்களின் **முக்கிய** பண்புசார் குணாதிசயங்களாக கருதப்படுகிறது ?
A - பொருத்தப்பாடு B - விளங்கிக்கொள்ளக்கூடியதன்மை
C - முன்னெச்சரிக்கை D - முக்கியத்துவத்தன்மை
(1) A, B ஆகியன மாத்திரம். (2) A, C ஆகியன மாத்திரம். (3) A, D ஆகியன மாத்திரம்.
(4) B, C ஆகியன மாத்திரம். (5) A, B, C, D ஆகிய எல்லாம். (.........)

11. பின்வரும் தகவல்கள் கம்பனியொன்றின் 31.03.2013 இல் முடிவடைந்த மாதத்துடன் தொடர்பானதாகும்.

| **விபரம்** | **அலகுகள்** | **அலகு விலை (ரூபா.)** |
|---|---|---|
| 01.03.2013 இலுள்ளவாறான சரக்கிருப்பு | 1 000 | 100 |
| 07.03.2013 இல் கொள்வனவுகள் | 5 000 | 120 |
| 15.03.2013 இல் கொள்வனவுகள் | 3 000 | 140 |
| 20.03.2013 இல் விற்பனைகள் | 8 000 | - |

கம்பனியானது சரக்குகளின் விநியோகத்திற்கான விலையிடலிற்கு "முதல்-வந்தது-முதல்-சென்றது" முறையினைப் பயன்படுத்துகின்றது. வருட இறுதியில் சரக்கிருப்பின் தேறிய தேறக் கூடிய பெறுமதி அலகுகொன்றிற்கு ரூ. 120 ஆக இருந்தது.
கம்பனியின் நிதிக் கூற்றுக்களில் காட்டப்பட வேண்டிய 31.03.2013 இல் முடிவடையும் மாதத்திற்கான விற்பனைக் கிரயமும், 31.03.2013 இலுள்ளவாறான சரக்கிருப்பின் பெறுமதியும் பின்வருவனவற்றுள் எது ?

| | **31.03.2013 இல் முடிவடைந்த மாதத்திற்கான விற்பனைக்கிரயம் (ரூ.)** | **31.03.2013 இல் உள்ளவாறான சரக்கிருப்பு (ரூ.)** |
|---|---|---|
| (1) | 960 000 | 120 000 |
| (2) | 980 000 | 140 000 |
| (3) | 980 000 | 120 000 |
| (4) | 1 020 000 | 100 000 |
| (5) | 1 020 000 | 120 000 |

(.........)



Download Past Papers at : www.freebooks.lk

12. கம்பனியொன்று உணவுச்சாலையொன்றைக் கட்டுவதற்காக 01.10.2012 இல் நிலமொன்றை வாங்கியது. இது தொடர்பில் பின்வரும் செலவுகள் ஏற்பட்டுள்ளன.

| | ரூபா '000 |
|---|---|
| நிலத்தின் கொள்வனவு விலை | 4 000 |
| முத்திரை வரியும் சட்டக் கட்டணங்களும் | 200 |
| நிலத்திலிருந்த பழைய கட்டிடத்தை அகற்றுவதற்கான கிரயம் | 200 |
| கட்டிடம் கட்டுவதற்காக நிலத்தைத் தயார்படுத்த ஏற்பட்ட கிரயம் | 250 |
| நிலத்தின் வருடாந்த பராமரிப்புக் கிரயம் | 100 |

மேலும் பழைய கட்டிடப் பொருட்கள் ரூபா 50 000 இற்கு விற்கப்பட்டுள்ளது.
பின்வருவனவற்றுள் இ. க. நி - 16 (LKAS-16)- 'ஆதனம், பொறி மற்றும் உபகரணம்' இன்படி 31.03.2013 இலுள்ளவாறான நிலத்தின் கிரயம் எது ?

(1) ரூ. 4 400 000 (2) ரூ. 4 450 000 (3) ரூ. 4 550 000
(4) ரூ. 4 600 000 (5) ரூ. 4 700 000 (.........)

13. பின்வரும் தகவல்கள் உற்பத்தி நிறுவனமொன்றின் மார்ச் 2013 மாதத்துடன் தொடர்புடையதாகும்.

| | ரூபா '000 |
|---|---|
| குறைவேலையில் அதிகரிப்பு (முதன்மைக்கிரயத்தில் பெறுமதியிடப்பட்டுள்ளது.) | 300 |
| முடிவு சரக்கிருப்பில் குறைவு | 100 |
| பயன்படுத்திய நேர் மூலப்பொருட்கள் | 300 |
| நேர் ஊழியம் | 200 |
| தொழிற்சாலை மேந்தலைகள் | 200 |

நிறுவனத்தின் மார்ச் 2013 மாதத்திற்கான முதன்மைக் கிரயமும், விற்பனைக் கிரயமும் பின்வருவனவற்றுள் எது ?

| | **முதன்மைக்கிரயம் (ரூ.)** | **விற்பனைக் கிரயம் (ரூ.)** |
|---|---|---|
| (1) | 200 000 | 300 000 |
| (2) | 200 000 | 500 000 |
| (3) | 800 000 | 900 000 |
| (4) | 800 000 | 1 100 000 |
| (5) | 1 000 000 | 900 000 |

(.........)

14. கம்பனி ஒன்றில் 31.03.2013 இல் இருந்த முழுச் சரக்குகளும் வெள்ளத்தின் காரணமாக அழிவடைந்துள்ளது. 31.03.2013 இல் முடிவடைந்த வருடத்திற்கான பின்வரும் தகவல்கள் தரப்பட்டுள்ளது.

| | ரூ.'000 |
|---|---|
| 01.04.2012 இல் உள்ளவாறான சரக்கிருப்பு | 1 500 |
| கொள்வனவுகள் | 3 500 |
| கொள்வனவுத் திரும்பல்கள் | 500 |
| விற்பனைகள் | 4 800 |
| விற்பனைச் செலவுகள் | 600 |

சரக்குகளை அவற்றின் கிரயத்தின் மீது 20% இலாபம் வைத்து விற்பனை செய்வது கம்பனியின் கொள்கையாகும்.
31.03.2013 இலுள்ளவாறு அழிவடைந்த சரக்குகளின் பெறுமதி யாது ?

(1) ரூ. 500 000 (2) ரூ. 660 000 (3) ரூ. 750 000
(4) ரூ. 1 160 000 (5) ரூ. 1 500 000 (.........)

15. பங்காளன் ஒருவரால் பங்குடைமைக்கு கொடுக்கப்பட்ட கடன் தொடர்பில் பின்வரும் கூற்றுக்களில் எது சரி ?

A - உடன்பட்டுக் கொள்ளாதவிடத்து பங்காளன் வருடாந்த வட்டி வீதம் 5% இற்கு உரித்துடையவர்.
B - கடனானது பங்குடமையின் உரிமையாண்மையின் ஒரு பகுதியாகக் கருதப்படும்.
C - கடனிற்கான வட்டியானது பங்காளரின் இலாபநட்ட பகிர்வில் சீராக்கம் செய்யப்படும்.

(1) A மாத்திரம். (2) A, B ஆகியன மாத்திரம். (3) A, C ஆகியன மாத்திரம்.
(4) B, C ஆகியன மாத்திரம். (5) A, B, C ஆகிய எல்லாம். (.........)



Download Past Papers at : www.freebooks.lk

- **பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 16 ஆம் 17 ஆம் 18 ஆம் வினாக்களுக்கு விடையளிக்குக.**

பாலன், கேசவன் ஆகியோர் முறையே ரூ. 3 000 000, ரூ. 4 000 000 மூலதனமிட்டு 01.04.2012 இல் பங்குடைமையொன்றை ஆரம்பித்துள்ளனர். அவர்கள் பின்வரும் நிபந்தனைகளிற்கு உடன்பட்டுள்ளனர்.

- பாலன், கேசவன் ஆகியோர் முறையே ரூ. 450 000, ரூ. 750 000 வருடாந்த சம்பளம் பெற உரித்துடையவர்கள்.
- ஒவ்வொரு பங்காளனும் மூலதனத்தில் 10% வருடாந்த வட்டிக்கு உரித்துடையவர்கள்.
- பாலன், கேசவன் ஆகியோருக்கிடையில் இலாப நட்டங்கள் சமமாகப் பகிரப்படும்.

31.03.2013 இல் முடிவடைந்த வருடத்தில் பங்குடைமையானது ரூ. 2 400 000 இலாபம் ஈட்டியுள்ளது. பங்காளர்கள் இவ்வாண்டில் தமது சம்பளம், வட்டி ஆகியவைகளை காசாக எடுக்கவில்லை. ஜமீல் என்பவர் 31.03.2013 இல் பங்காளனாக அனுமதிக்கப்பட்டுள்ளார். இவர் மூலதனமாக ரூ. 2 000 000 இனைக் கொண்டு வந்துள்ளார். இத்தினத்தில் பங்குடைமையின் நன்மதிப்பு ரூ. 800 000 ஆக மதிப்பிடப்பட்டுள்ளது. இந்நன்மதிப்பானது புத்தகங்களில் சொத்தொன்றாகப் பதியப்பட்டிருக்கப்படவில்லை. இது பங்காளரின் மூலதனக்கணக்குகளூடாக சீராக்கம் செய்யப்பட்டுள்ளது. பாலன், கேசவன், ஜமீல் ஆகியோர் 01.04.2013 இலிருந்து பங்குடைமையின் இலாபநட்டங்களை முறையே 2:2:1 என்னும் விகிதத்தில் பகிரச் சம்மதித்துள்ளனர்.

16. 31.03.2013 இலுள்ளவாறான பாலன், கேசவன் ஆகியோரின் நடைமுறைக்கணக்கு மீதிகள் எவை ?

| | பாலன் (ரூ.) | கேசவன் (ரூ.) |
|---|---|---|
| (1) | 250 000 | 250 000 |
| (2) | 550 000 | 650 000 |
| (3) | 700 000 | 1 000 000 |
| (4) | 1 000 000 | 1 400 000 |
| (5) | 1 200 000 | 1 200 000 |

(.........)

17. 31.03.2013 இலுள்ள பங்குடைமையின் உரிமையாண்மையில் ஏற்பட்ட **அதிகரிப்பு** எவ்வளவு ?
(1) ரூ. 800 000 (2) ரூ. 2 000 000 (3) ரூ. 2 800 000 (4) ரூ. 3 200 000 (5) ரூ. 4 400 000 (.........)

18. பங்காளரின் 01.04.2013 இலுள்ளவாறான மூலதனக்கணக்கு மீதிகள் எவை ?

| | பாலன் (ரூ.) | கேசவன் (ரூ.) | ஜமீல் (ரூ.) |
|---|---|---|---|
| (1) | 3080 000 | 4080 000 | 1840 000 |
| (2) | 3320 000 | 4320 000 | 2160 000 |
| (3) | 3380 000 | 4480 000 | 2040 000 |
| (4) | 3300 000 | 4400 000 | 2000 000 |
| (5) | 3400 000 | 4400 000 | 2000 000 |

(.........)

19. உரிமை வழங்கலின்போது கம்பனியின் பங்குதாரர்களால் அவர்களின் முழு உரிமைகளும் பாவிக்கப்படுமாயின் கம்பனியொன்றின் சொத்துக்களின் பெறுமதியிலும் உரிமையாண்மையிலும் இந்த உரிமை வழங்கலினால் ஏற்படும் தாக்கம் எது ?

| | சொத்துக்கள் | உரிமையாண்மை |
|---|---|---|
| (1) | அதிகரிப்பு | அதிகரிப்பு |
| (2) | குறைவு | குறைவு |
| (3) | குறைவு | அதிகரிப்பு |
| (4) | அதிகரிப்பு | குறைவு |
| (5) | மாற்றமில்லை | மாற்றமில்லை |

(.........)

20. பின்வருவனவற்றுள் எவை கம்பனியொன்றின் உரிமையாண்மையின் கூறுகளாக இனங்காணப்படுகிறது ?
A - நிலத்தின் மீதான மீள்மதிப்பு ஒதுக்கம்
B - செலுத்தவேண்டிய ஊழியர் சேமலாப நிதி
C - பெறுமானத் தேய்விற்கான ஏற்பாடு
D - நிறுத்தி வைத்த வருவாய்கள்
(1) A, C ஆகியன மத்திரம். (2) A, D ஆகியன மத்திரம். (3) B, D ஆகியன மத்திரம்.
(4) C, D ஆகியன மத்திரம். (5) A, C, D ஆகியன மத்திரம். (.........)



Download Past Papers at : www.freebooks.lk

21. பின்வரும் தகவல்கள் கம்பனி ஒன்றின் 31.03.2013 இல் முடிவடைந்த வருடத்துடன் தொடர்புடையதாகும்.

| | ரூபா '000 |
|---|---|
| வருடத்திற்கான இலாபம் | 850 |
| பெறுமானத் தேய்வு | 120 |
| கட்டிட விற்பனையிலிருந்தான இலாபம் | 50 |
| இருப்புக்களில் ஏற்பட்ட அதிகரிப்பு | 20 |
| கடன்பட்டோரில் ஏற்பட்ட குறைவு | 40 |

இவ்வருடத்திற்கான செயற்பாட்டு நடவடிக்கைகளிலிருந்தான காசுப்பாய்ச்சல் பின்வருவனவற்றுள் எது ?

(1) ரூ. 760 000 (2) ரூ. 800 000. (3) ரூ. 900 000.
(4) ரூ. 920 000. (5) ரூ. 940 000. (.........)

22. பின்வரும் சூழ்நிலைகளில் எது/எவை கம்பனியின் நிதிக் கூற்றுக்களில் பொறுப்புகளுக்கான ஏற்பாடுகளில் ஒன்றாக இனங்காண இட்டுச் செல்லும் ?

A - பழுதுடைந்தவைகள் திருத்திக் கொடுக்கப்படும் என்பதற்கிணங்க ஒரு வருட உத்தரவாதத்தில் பொருட்கள் விற்பனை செய்யப்பட்டுள்ளது.

B - வருட இறுதியில் வியாபாரக் கடன்பட்டோர் மீதியின் மீது ஐயக்கடனிற்கான ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

C - சட்ட தேவைப்பாடு இல்லாத போதும், உற்பத்திச் செய்முறையால் ஏற்படும் சூழல் மாசடைதலினை இயலக்கூடியளவிற்கு குறைத்தல் தேவையானதாகும்.

(1) A மாத்திரம். (2) B மாத்திரம். (3) A, C ஆகியன மாத்திரம்.
(4) B, C ஆகியன மாத்திரம். (5) A, B, C ஆகிய எல்லாம். (.........)

3. வரை. நந்தன் பொதுக்கம்பனியின் 31.03.2013 இல் முடிவடையும் வருடத்திற்கான நிதிக் கூற்றுக்களிற்கு 31.05.2013 இல் இயக்குனர்களால் அதிகாரமளிக்கப்பட்டுள்ளது. கம்பனியின் வருடாந்தப் பொதுக் கூட்டமானது 15.06.2013 இல் இடம்பெற்றுள்ளது. கம்பனி தொடர்பான பின்வரும் நிகழ்வுகள் 31.03.2013 இற்குப்பின்னர் இடம் பெற்றுள்ளது.

A - 01.04.2013 இலிருந்து 20.04.2013 வரை கொழும்பு பங்குப் பரிமாற்றகத்தில் பட்டியலிடப்பட்டுள்ள கம்பனிகளின் முதலீடுகளின் சந்தைப் பெறுமதியில் வீழ்ச்சி

B - முக்கிய வாடிக்கையாளர் ஒருவரால் 01.10.2012 இல் கம்பனிக்கெதிராகத் தொடுக்கப்பட்ட வழக்கொன்றில் அவருக்கு ஏற்பட்ட பாதிப்புகளுக்கு கம்பனி பணம் செலுத்த வேண்டும் என்பதை உறுதிப்படுத்தி 30.04.2013 இல் நீதிமன்றத்தினால் வழங்கப்பட்ட தீர்ப்பு.

C - 31.03.2013 இல் முடிவடையும் வருடத்திற்கான இறுதிப்பங்கிலாபமாக பங்கொன்றிற்கு ரூ. 2 இனை 10.06.2013 இல் பிரகடனப்படுத்தல்.

D - 31.03.2013 இலுள்ள சரக்குகள் அதன் கிரயத்தினை விட குறைவான விலையில் 25.05.2013 இல் விற்பனை செய்யப்பட்டமை.

மேலே காணப்படும் எந்த நிகழ்வுகளை 31.03.2013 இலுள்ள நிதிக் கூற்றுக்களில் சீராக்கம் செய்தல் வேண்டும் ?

(1) A, C ஆகியன மாத்திரம். (2) A, D ஆகியன மாத்திரம். (3) B, D ஆகியன மாத்திரம்.
(4) B, C, D ஆகியன மாத்திரம். (5) A, B, C, D ஆகிய எல்லாம். (.........)

24. வியாபார நடவடிக்கையில் ஈடுபட்டுள்ள கம்பனியொன்றின் நடைமுறை விகிதம் 3 : 1 ஆகும். கம்பனியின் பின்வரும் கொடுக்கல் வாங்கல்களில் எது இவ்விகிதத்தில் **குறைவினை** ஏற்படுத்துவதற்கு வழிவகுக்கும் ?

(1) நீண்ட காலக் கடனொன்றைப் பெறல்
(2) இருப்புக்களை கடனிற்கு இலாபத்தில் விற்பனை செய்தல்
(3) காசுக்கு இயந்திரத்தினை வாங்குதல்
(4) கடன்பட்டோரிடமிருந்து காசு பெறல்
(5) கடன்கொடுத்தோருக்கு காசு கொடுப்பனவு (.........)

25. பின்வரும் தகவல்கள் கம்பனியொன்றின் 31.03.2013 இல் முடிவடைந்த வருடத்துடன் தொடர்பானதாகும்.

| | ரூ.'000 |
|---|---|
| விற்பனைகள் | 900 |
| விற்பனைக் கிரயம் | 600 |
| 01.04.2012 இல் சரக்கிருப்பு | 125 |
| 31.03.2013 இல் சரக்கிருப்பு | 175 |

வருடத்தில் 360 வேலை நாட்கள் உள்ளன எனக் கருதுக.

31.03.2013 இல் முடிவடைந்த வருடத்திற்கான கம்பனியின் சரக்கு வைத்திருக்கும் காலம்:

(1) 60 நாட்கள் (2) 70 நாட்கள் (3) 75 நாட்கள்
(4) 90 நாட்கள் (5) 105 நாட்கள் (.........)



Download Past Papers at : www.freebooks.lk

26. பின்வருவன நிறுவனமொன்றினால் பாவிக்கப்படும் மூலப்பொருளொன்றுடன் தொடர்பானது.

| | ஆகக்கூடியது | ஆகக்குறைந்தது |
|---|---|---|
| பாவனை (அலகுகள்) | 600 | 200 |
| விநியோகக் காலம் (கிழமைகள்) | 6 | 3 |

இம் மூலப்பொருளின் ஆகக்குறைந்த சரக்கிருப்பு மட்டம் யாது ?

(1) 600 அலகுகள் (2) 1 800 அலகுகள் (3) 3 000 அலகுகள்
(4) 3 600 அலகுகள் (5) 4 400 அலகுகள் (.........)

27. கம்பனியொன்றினால் உற்பத்தி செய்யப்படும் பொருளொன்றின் பின்வரும் தகவல்கள் தரப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| முதன்மைக் கிரயம் | ரூ. 600 000 |
| பாதிட்ட மேந்தலைக் கிரயங்கள் - உற்பத்தி திணைக்களம் | ரூ. 350 000 |
| - சேவைத் திணைக்களம் | ரூ. 50 000 |
| உற்பத்தி செய்த அலகுகளின் எண்ணிக்கை | 75 000 அலகுகள் |
| பாதிட்ட இயந்திர மணித்தியாலங்கள் | 50 000 (அலகொன்றிற்கான இயந்திர மணித்தியாலம் = 5) |

இயந்திர மணித்தியாலமொன்றிற்கான மேந்தலை உறிஞ்சல் வீதமும், அலகொன்றிற்கான உற்பத்திக் கிரயமும் பின்வருவனவற்றுள் எது ?

| | இயந்திர மணித்தியாலமொன்றிற்கான மேந்தலை உறிஞ்சல் வீதம் (ரூ.) | அலகொன்றிற்கான உற்பத்திக்கிரயம் (ரூ.) |
|---|---|---|
| (1) | 6 | 38 |
| (2) | 7 | 43 |
| (3) | 7 | 15 |
| (4) | 8 | 16 |
| (5) | 8 | 48 |

(.........)

- **பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 28 ஆம் 29 ஆம் வினாக்களுக்கு விடையளிக்கவும்.**

கம்பனியொன்று தனிப்பொருள் ஒன்றை 01.04.2013 இல் உற்பத்தி செய்ய தொடங்கியுள்ளதுடன் அலகொன்றினை ரூபா 200 இற்கு விற்பனை செய்கிறது. 31.03.2013 இல் முடிவடைந்த வருடத்தில் ஏற்பட்ட கிரயங்கள் பின்வருமாறு இருந்தன.

| | |
|---|---|
| அலகொன்றிற்கான மாறும் கிரயங்கள்: | |
| நேர் மூலப்பொருள் | ரூ. 40.00 |
| நேர் ஊழியம் | ரூ. 25.00 |
| உற்பத்தி மேந்தலைகள் | ரூ. 20.00 |
| விற்பனை விநியோக மேந்தலைகள் | ரூ. 15.00 |
| வருடாந்த நிலையான கிரயங்கள்: | |
| உற்பத்தி மேந்தலைகள் | ரூ. 200 000 |
| விற்பனை விநியோக மேந்தலைகள் | ரூ. 350 000 |
| உற்பத்தி | 20 000 அலகுகள் |

28. அலகொன்றிற்கான முதன்மைக் கிரயம் மற்றும் 20 000 அலகுகளில் மொத்த உற்பத்திக்கிரயம் ஆகியன முறையே:

(1) ரூ. 65, ரூ. 1 500 000 (2) ரூ. 65, ரூ. 1 900 000
(3) ரூ. 85, ரூ. 1 900 000 (4) ரூ. 85, ரூ. 2 200 000
(5) ரூ. 100, ரூ. 2 200 000 (.........)

29. அலகொன்றிற்கான பங்களிப்பு மற்றும் 20 000 அலகுகளில் இலாபம் ஆகியன முறையே:

(1) ரூ. 90, ரூ. 1 250 000 (2) ரூ. 100, ரூ. 1 450 000
(3) ரூ. 115, ரூ. 1 750 000 (4) ரூ. 125, ரூ. 1 950 000
(5) ரூ. 135, ரூ. 2 150 000 (.........)

30. ஏனைய காரணிகள் மாறாது இருக்கும்போது விற்பனை விலையில் குறைவும் நிலையான கிரயத்தில் அதிகரிப்பும் ஏற்படும்போது பின்வரும் கூற்றுக்களில் எது **சரியானதாக** இருக்கும் ?

A - சமப்பாட்டுப் புள்ளி பாதிக்கப்படமாட்டாது. B - சமப்பாட்டுப் புள்ளி குறையும்.
C - சமப்பாட்டுப் புள்ளி அதிகரிக்கும். D - இலாபம் குறையும்.
E - பங்களிப்பு குறையும்.

(1) A, B ஆகியன மாத்திரம். (2) A, B, E ஆகியன மாத்திரம்.
(3) A, B, C, D ஆகியன மாத்திரம். (4) C, D ஆகியன மாத்திரம்.
(5) C, D, E ஆகியன மாத்திரம். (.........)



Download Past Papers at : www.freebooks.lk

**2.1.3** வினாத்தாள் I இல் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டமும்

| வினா இலக்கம் | விடை | வினா இலக்கம் | விடை |
|---|---|---|---|
| 01. | 5 | 16. | 4 |
| 02. | 1 | 17. | 5 |
| 03. | 5 | 18. | 1 |
| 04. | 1 | 19. | 1 |
| 05. | 1 | 20. | 2 |
| 06. | 2 | 21. | 5 |
| 07. | 3 | 22. | 3 |
| 08. | 1 | 23. | 3 |
| 09. | 4 | 24. | 3 |
| 10. | 1 | 25. | 4 |
| 11. | 3 | 26. | 2 |
| 12. | 4 | 27. | 5 |
| 13. | 2 | 28. | 2 |
| 14. | 1 | 29. | 2 |
| 15. | 1 | 30. | 5 |

**சரியான ஒரு விடைக்கு 04 புள்ளி வீதம் மொத்தம் 120 புள்ளிகள்**



Download Past Papers at : www.freebooks.lk

## 2.1.4 வினாத்தாள் I இல் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டமும்

- **31 தொடக்கம் 50 வரையுள்ள வினாக்களுக்கான சுருக்க விடைகளைப் புள்ளிக் கோடுகளில் எழுதுக.**

31. பின்வரும் கூற்றுக்களில் எது **"சரி"** , எது **"பிழை"** என்பதைப் பொருத்தமான நிரலில் அடையாளமிடுவதன் மூலம் காட்டுக.

| கூற்று | சரி | பிழை |
|---|---|---|
| A - முகாமைக் கணக்கீட்டின் அடிப்படை நோக்கமாக உள்வாரியான அக்கறையுடையோரால் நிறுவனம் பற்றிய தீர்மானம் எடுப்பதற்குத் தகவல்களை வழங்குவதாகும். | ......... | ......... |
| B - பணரீதியாக அளவிடக்கூடிய கொடுக்கல்வாங்கல்கள் மட்டுமே நிறுவனத்தின் கணக்குப் புத்தகங்களில் பதியப்படும். | ......... | ......... |
| C - நிறுவனத்தின் தகவல்களைப் பயன்படுத்தும் வெளிவாரியான பாவனையாளர்களினால் தீர்மானம் எடுப்பதற்கு "குறித்த நோக்கம் கொண்ட நிதிக் கூற்றுக்கள்" வழங்கப்படுகிறது. | ......... | ......... |
| D - பொருளாதார தீர்மானங்களை சமூகம் எடுப்பதற்குத் தேவையான தகவல்களை வழங்குவதற்காக கணக்கீடானது தோன்றியதாகும். | ......... | ......... |

**விடை**

| | | | |
|---|---|---|---|
| 31. A | - | சரி | (01) |
| B | - | சரி | (01) |
| C | - | பிழை | (01) |
| D | - | சரி | (01) |

32. நிறுவனமொன்றின் பின்வரும் கொடுக்கல்வாங்கல்கள் மற்றும் நிகழ்வுகளினால் அந்நிறுவனத்தின் கணக்காண்டின் இறுதியில் காணப்படும் சொத்துக்கள், பொறுப்புக்கள், உரிமையாண்மை ஆகியவைகளின் மீதிகள் **அதிகரிக்குமா, குறையுமா, மாற்றமடையாதா** என்பதைக் குறிப்பிடுக.

| கொடுக்கல்வாங்கல்கள் | சொத்துக்கள் | பொறுப்புக்கள் | உரிமையாண்மை |
|---|---|---|---|
| A - உரிமையாளர்களின் மூலம் மூலதனத்தை அதிகரித்தல் | ...................... | ...................... | ...................... |
| B - ஐயக்கடனிற்கான ஏற்பாடு | ...................... | ...................... | ...................... |
| C - வட்டியுடன் கூடிய கடன் தவணைப் பணக் கொடுப்பனவு | ...................... | ...................... | ...................... |
| D - வருடமுடிவில் சாதாரண பங்குதாரர்களிற்கான பங்கிலாப பிரகடனம் | ...................... | ...................... | ...................... |

**விடை**

| 32. | சொத்துக்கள் | பொறுப்புக்கள் | உரிமையாண்மை | |
|---|---|---|---|---|
| A | அதிகரிக்கும் | மாற்றமில்லை | அதிகரிக்கும் | (01) |
| B | குறையும் | மாற்றமில்லை | குறையும் | (01) |
| C | குறையும் | குறையும் | குறையும் | (01) |
| D | மாற்றமில்லை | மாற்றமில்லை | மாற்றமில்லை | (01) |



Download Past Papers at : www.freebooks.lk

33. பின்வரும் ஒவ்வொரு கொடுக்கல்வாங்கல்களையும் பதிவதற்கு தேவையான மூல ஆவணங்களையும் அவைகளைப் பதிவதற்குப் பொருத்தமான முதன்மைப் பதிவேடுகளையும் குறிப்பிடுக.

| கொடுக்கல்வாங்கல் | மூல ஆவணம் | முதன்மைப் பதிவேடு |
|---|---|---|
| A - கடனிற்கு சரக்கு விற்பனை | ................................ | ................................ |
| B - கடன்பட்டோர் சரக்குகளை திருப்பியனுப்பதல் | ................................ | ................................ |
| C - கடன்பட்டோரிடமிருந்து காசு பெறல் | ................................ | ................................ |
| D - அறவிட முடியாக் கடனைப் பதிவழித்தல் | ................................ | ................................ |

**விடை**

33.

| | மூல ஆவணம் | | முதன்மைப் பதிவேடு |
|---|---|---|---|
| A | பட்டியல் | - | விற்பனைநாளேடு |
| B | செலவுத்தாள் | - | உட்திரும்பல் நாளேடு |
| C | பற்றுச்சீட்டு | - | காசேடு |
| D | நாட்குறிப்பு கைச்சாத்து | - | பொது நாட்குறிப்பு (04) |

34. வியாபாரமொன்றின் சில்லறைக் காசாளரிடம் மாதத் தொடக்கத்தில் ரூ. 10 000 சில்லறைக்காசு முற்பணமாகக் கொடுக்கப்படுகிறது. மாத இறுதியில் இவர் ரூ. 8 000 இனை மீள் நிரப்புத் தொகையாகக் கேட்டுள்ளார்.

பின்வருவனவற்றைக் குறிப்பிடுக.

(அ) மாதத்துக்கான சில்லறைக்காசு செலவுகள் : (ரூ.)........................................................................

(ஆ) மீள் நிரப்பலுக்கான நாட்குறிப்பு பதிவு (விளம்பல் தேவையில்லை) :

..................................................................................................................................

..................................................................................................................................

**விடை**

34. (அ) ரூ. 8 000 (02)

(ஆ) சில்லறை காசேடு வரவு 8 000
காசு கணக்கு செலவு 8 000 (02)

35. நிறுவனமொன்றின் கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கின் 01.03.2013 இலுள்ளவாறான வரவு மீதி ரூ. 50 000 ஆகும். மார்ச் 2013 மாதத்திற்கான விற்பனை நாளேட்டின் மொத்தம் ரூ. 520000 ஆனது கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் ரூ. 250 000 ஆகப் பதியப்பட்டுள்ளது. எனினும், விற்பனைக் கணக்கில் சரியான தொகை பதியப்பட்டுள்ளது. இம்மாதத்தில் கடன்பட்டோர் ரூ. 200 000 செலுத்தியுள்ளனர். மாத முடிவிலுள்ள கடன்பட்டோரின் மீதியில் 10% இனை ஐயக்கடனிற்கான ஏற்பாடாகச் செய்யப்பட்டுள்ளது.

மேற்படி பிழைகளைத் திருத்துவதற்கான நாட்குறிப்பு பதிவுகளை எழுதுக. (விளம்பல் தேவையில்லை)

..................................................................................................................................

..................................................................................................................................

..................................................................................................................................

..................................................................................................................................

**விடை**

35. I கடன்பட்டோர் கட்டுப்பாட்டு கணக்கு வரவு 270 000
தொங்கல் கணக்கு செலவு 270 000 (02)

II ஐயக்கடன் கணக்கு/ இலாபநட்டக்கணக்கு வரவு 27 000
ஐயக்கடன் ஏற்பாடு கணக்கு செலவு 27 000 (02)



Download Past Papers at : www.freebooks.lk

**36.** சொத்துக்களுக்கான கணக்கீட்டின்போது நிறுவனமொன்று வரலாற்றுக் கிரய எண்ணக்கருவிலிருந்து விலகிச் செல்லக்கூடிய **இரண்டு** சூழ்நிலைகளைக் குறிப்பிடுக.

........................................................................................................................

........................................................................................................................

**விடை**

36. 1. - சொத்துக்களை மீள் மதிப்பீடு செய்தல (02)

2. - சரக்கிருப்பினை தேறிய தேறதக்க பெறுமதிக்கு மதிப்பிடல் (02)

**37.** ஆடைத் தொழிற்சாலையொன்று தொடர்பில் பின்வரும் ஒவ்வொரு சூழ்நிலைக்கும் **மிகவும் பொருத்தமான** கணக்கீட்டு எண்ணக்கருவினை இனங்காண்க.

A - துணிகளின் இருப்புக்களை நடைமுறைச் சொத்துக்களாகவும், தையல் இயந்திரங்களை நடைமுறையல்லாச் சொத்துக்களாகவும் வகைப்படுத்தல்.

B - குறிப்பிட்ட வருடத்தில் செலுத்திய தொழிற்சாலை வாடகையின் ஒரு பகுதியை முற்கொடுப்பனவாக இனங்காணுதல்.

C - வருட இறுதியிலுள்ள துணிகளின் இருப்புக்களை கிரயத்தினதும் மற்றும் தேறிய தேறக்கூடிய பெறுமதியினதும் குறைவான தொகையில் பெறுமதியிடல்.

D - ஆடைகளை விற்பனை செய்யும்போது விற்பனை வருமானத்தை இனங்காணுதல்.

| உருப்படி | கணக்கீட்டு எண்ணக்கரு |
|---|---|
| A - | ................................................ |
| B - | ................................................ |
| C - | ................................................ |
| D - | ................................................ |

**விடை**

37. A – தொடர்ந்தியங்கும் எண்ணக்கரு (01)

B – அட்டுறு எண்ணக்கரு/ இணைதல் (01)

C – முன்னெச்சரிக்கை எண்ணக்கரு (01)

D – தேறல் எண்ணக்கரு (01)

**38.** நிதிக் கூற்றுக்களைத் தயாரித்தல் மற்றும் சமர்ப்பித்தல் சட்டகத்தில் தரப்பட்டுள்ள வரைவிலக்கணத்திற்கமைய பொறுப்பொன்றிற்கான **மூன்று** பிரதான பண்புகளையும் குறிப்பிடுக.

........................................................................................................................

........................................................................................................................

........................................................................................................................

**விடை**

38. 1. கடந்த கால கொடுக்கல் வாங்கல்களினால் ஏற்பட்டிருத்தல்

2. நிகழ்காலக் கடப்பாடு ஒன்றிருத்தல்

3. எதிர்காலத்தில் காசு வெளிப்பாய்ச்சலை ஏற்படுத்தக் கூடியது (04)

**39.** **ஜெயமணி** விளையாட்டுக் கழகத்தில் 31.03.2013 இல் 50 அங்கத்தவர்கள் உள்ளனர். அங்கத்தவர் ஒருவருக்கான வருடாந்த சந்தாப்பணம் ரூ. 1 000 ஆகும். 31.03.2013 இல் முடிவடைந்த வருடத்தில் சந்தாப்பணமாக ரூ. 45 000 காசாகப் பெறப்பட்டது. முற்பணமாகப்பெற்ற சந்தா 31.03.2013, 31.03.2012 இலுள்ளவாறு முறையே ரூ. 5 000, ரூ. 3 000 ஆகும். பின்வருவனவற்றைக் கணிக்குக

(அ) 31.03.2013 இல்முடிவடைந்த வருடத்திற்கான சந்தா வருமானம் (ரூ.) ..........................................

(ஆ) 31.03.2013 இலுள்ள சந்தா நிலுவை (ரூ.) ..........................................

**விடை**

39. (அ) ரூ. 50 000 (02)

(ஆ) ரூ. 7 000 (02)



Download Past Papers at : www.freebooks.lk

● **பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 40 ஆம் 41 ஆம் வினாக்களுக்கு விடை தருக.**

விதுசன், தர்ஷன் பங்குடைமையின் நடைமுறைக் கணக்கு மீதி பின்வருமாறு இருந்தது.

| | **31.03.2013 இலுள்ளவாறு (ரூபா'000)** | **31.03.2012 இலுள்ளவாறு (ரூபா'000)** |
|---|---|---|
| விதுஷன் | 960 | 500 |
| தர்ஷன் | 940 | 600 |

பங்குடைமை ஒப்பந்தத்தின் நிபந்தனைகள் பின்வருமாறு:

- விதுஷன், தர்ஷன் ஆகியோர் வருடாந்த சம்பளங்களாக முறையே ரூ. 240 000, ரூ. 360 000 ஆகியவற்றுக்கு உரித்துடையவர்கள்.
- இலாப நட்டங்களானது விதுஷன், தர்ஷன் என்போருக்கிடையில் முறையே 3:2 விகிதத்தில் பகிரப்படுகிறது.

31.03.2013 இல் முடிவடைந்த வருடத்தில் விதுஷன், தர்ஷன் ஆகியோருக்கு ரூ. 200 000, ரூ. 300 000 சம்பளமாக செலுத்தப்பட்டது.

**40.** 31.03.2013 இல் முடிவடைந்த வருடத்தில் பங்குடைமை ஈட்டிய இலாபம் எவ்வளவு ?

.....................................................................................................................................

**விடை**

40. ரூ. 1 300 000 (04)

**41.** விதுஷன், தர்ஷன் ஆகியோருக்கு அவர்களுக்குரித்தான சம்பளங்கள் செலுத்தப்படாது இருக்குமாயின் அவர்களின் 31.03.2013 இலுள்ளவாறான நடைமுறைக் கணக்கு மீதி எவ்வளவாக இருந்திருக்கும் ?

விதுஷன் (ரூ.) ..........................................................................................................

தர்ஷன் (ரூ.) ............................................................................................................

**விடை**

41. விதுஷன் ரூ.1 160 000/= (02) தர்ஷன் ரூ.1 240 000 (02)

**42.** "இ.க.நி. 8 (கணக்கீட்டு கொள்கைகள் மற்றும் கணக்கீட்டு மதிப்பீட்டில் ஏற்படும் மாற்றங்களும் தவறுகளும்) இன்படி நிறுவனமொன்று தனது கணக்கீட்டுக் கொள்கைகளை மாற்றக்கூடிய **இரண்டு** சூழ்நிலைகளைத் தருக.

.....................................................................................................................................

.....................................................................................................................................

**விடை**

42. 1. கணக்கீட்டு நியமம் ஒன்றின் தேவைப்பாடு (02)
 2. நம்பகரமானதாகவும், நியாயமான முறையிலும் வெளிப்படுத்த முடியும் எனக் கருதினால் (02)

● **பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 43 ஆம் 44 ஆம் வினாக்களுக்கு விடை தருக.**

நிறுவனமொன்று பின்வரும் நிபந்தனைகளின் கீழ் நிதிக் குத்தகையில் இயந்திரமொன்றை வாங்கியது.

- குத்தகைக்காலம் 3 வருடங்களாகும்.
- வருடாந்த தவணைக்கட்டணம் ரூ. 250 000 ஆனது வருட இறுதியில் செலுத்த வேண்டும்.
- குத்தகைக்கான உட்கிடையான வட்டி வீதம் 10% ஆகும்.
- ஆகக் குறைவான குத்தகைக் கட்டணத்தின் நிகழ்காலப் பெறுமதி ரூ. 621 725 ஆகும்.

**43.** குத்தகையின் ஆரம்பத்திலுள்ள குத்தகையின் பொறுப்புகளை இனங்காண்பதற்கான நாட்குறிப்புப் பதிவுகளை குத்தகைக்கு எடுத்தவரின் புத்தகங்களில் எழுதுக. *(விளம்பல் தேவையில்லை)*

.....................................................................................................................................

.....................................................................................................................................

.....................................................................................................................................

.....................................................................................................................................

**விடை**

| | | | |
|---|---|---|---|
| 43. இயந்திரக் கணக்கு | வரவு | 6 21 725 | |
| குத்தகைக் கடன்கொடுத்தோர் கணக்கு | செலவு | | 6 21 725 (04) |



Download Past Papers at : www.freebooks.lk

44. குத்தகைக்கு எடுத்தவரின் புத்தகங்களில் பின்வருவனவற்றைக் கணிக்குக.

(அ) முதலாம் வருடத்திற்கான குத்தகை வட்டி (ரூ) : ..........

(ஆ) முதலாம் வருட முடிவில் குத்தகைப் பொறுப்பு (ரூ) : ..........

**விடை**

44. (அ) ரூ. 62 173 (02)
(ஆ) ரூ. 4 33 898 (02)

45. 31.03.2013 இல் கம்பனியொன்றின் நடைமுறை விகிதம் 2.5 : 1 ஆகவும், நடைமுறைப் பொறுப்புக்கள் ரூ. 120 000 ஆகவும் காணப்படுகிறது. இத்திகதியில் கம்பனியிடம் ரூ. 180 000 பெறுமதியான சரக்கிருப்பு காணப்படுமாயின்:

(அ) 31.03.2013 இல் உள்ளவாறான நடைமுறைச் சொத்துக்களின் பெறுமதி யாது ?

..........

(ஆ) 31.03.2013 இல் விரைவு விகிதம் யாது ?

..........

**விடை**

45. (அ) ரூ. 300 000 (02)
(ஆ) 1:1 (02)

46. பின்வரும் ஒவ்வொரு சூழ்நிலையிலும் கம்பனியொன்றின் கடன் - உரிமையாண்மை விகிதம் **அதிகரிக்குமா ? குறைவடையுமா ? மாற்றமடையாதா ?** என்பதைக் குறிப்பிடுக.

| **சூழ்நிலை** | **கடன்-உரிமையாண்மை விகிதம் மீதான தாக்கம்** |
|---|---|
| A - சொத்துக்களின் மீள்மதிப்பு தொகையை உயர்த்தியது | .......... |
| B - நீண்டகாலக் கடன் பெறப்பட்டது | .......... |
| C - சரக்குகளை கடனிற்கு வாங்கியது | .......... |
| D - புதிய பங்குகளை வழங்கியது | .......... |

**விடை**

46. A - குறையும் (01)
B - அதிகரிக்கும் (01)
C - மாற்றமில்லை (01)
D - குறையும (01)

47. பின்வரும் கிரய உருப்படிகளில் எவைகளை தளபாட உற்பத்தியில் ஈடுபடும் கம்பனியொன்றின் முதன்மைக் கிரயங்களின் கூறுகளாக வகைப்படுத்தலாம் ?

| **கிரய உருப்படி** | **முதன்மைக் கிரயக் கூறுகள் (ஆம் / இல்லை)** |
|---|---|
| A - மரவேலை செய்வோருக்கான கூலிகள் | .......... |
| B - தொழிற்சாலைக்கான மின்சாரக் கட்டணம் | .......... |
| C - பாவித்த மரங்களிற்கான கிரயம் | .......... |
| D - பொறிக்கான பெறுமானத்தேய்வு | .......... |

**விடை**

47. A - ஆம் (01)
B - இல்லை (01)
C - ஆம் (01)
D - இல்லை (01)



Download Past Papers at : www.freebooks.lk

● **பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 48 ஆம் 49 ஆம் வினாக்களுக்கு விடை தருக.**

கம்பனியொன்று ஒரேவகையான கைத்தொலைபேசிகளை உற்பத்தி செய்து அலகொன்றினை ரூ. 25 000 இற்கு விற்பனை செய்கிறது. கம்பனியின் அடுத்த ஆண்டிற்கான பாதிடப்பட்ட விற்பனைகள் 400 அலகுகளாகும். இது கம்பனியின் இயலளவின் 80% இனைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது. இம்மட்ட செயற்பாட்டிற்கான பாதிட்ட கிரயங்கள் பின்வருமாறு:

நேர்மூலப்பொருட்கள் ரூ. 4 000 000
நேர் ஊழியம் ரூ. 2 000 000 (உற்பத்தி செய்யப்பட்ட அலகுகளின் அடிப்படையில் செலுத்தப்படும்.)
மொத்த மேந்தலைகள்: நிலையானவை-ரூ. 750 000, மாறுபவை ரூ. 1 000 000

48. பின்வருவனவற்றைக் கணிப்பிடுக.

(அ) சமப்பாட்டுப் புள்ளி (அலகுகளில்) : ........................................................................

(ஆ) பாதுகாப்பு எல்லை (ரூபாவில்) : ........................................................................

**விடை**

48. (அ) 100 அலகுகள் (02)

(ஆ) ரூ 7 500 000 (02)

49. கம்பனியொன்றின் விற்பனை விலையில் ஏற்படும் 10% குறைவானது அதன் அலகு விற்பனைகளை கம்பனியின் இயலளவின் 90% இற்கு அதிகரிக்குமாயின் கம்பனியின் இலாபத்தில் ஏற்படும் **அதிகரிப்பு** அல்லது **குறைவு** யாது ?

........................................................................................................................................

........................................................................................................................................

**விடை**

49. ரூ 7 50 000 ஆல் குறையும்
(02) (02)

50. ஏனைய காரணிகள் மாறாத நிலையில் முதலீட்டு செயற்திட்டமொன்றின் தேறிய நிகழ்காலப் பெறுமதியினை பின்வரும் ஒவ்வொரு சூழ்நிலைகளும் ***அதிகரிக்குமா ? குறைக்குமா ? மாற்றத்தை ஏற்படுத்தாதா ?*** என்பதைச் குறிப்பிடுக.

| சூழ்நிலை | தேறிய நிகழ்காலப் பெறுமதியின் மீதான தாக்கம் |
|---|---|
| (அ) ஆரம்ப முதலீட்டில் அதிகரிப்பு | :.................................................................. |
| (ஆ) வருடாந்த பெறுமானத் தேய்வில் அதிகரிப்பு | : .................................................................. |
| (இ) எதிர்பார்க்கப்படும் வருடாந்த காசு வெளிப்பாய்ச்சலில் குறைவு | : .................................................................. |
| (ஈ) கழிவீட்டு வீதத்தில் குறைவு | : .................................................................. |

**விடை**

50. (அ) குறைக்கும் (01)

(ஆ) மாற்றத்தை ஏற்படுத்தாது (01)

(இ) அதிகரிக்கும் (01)

(ஈ) அதிகரிக்கும் (01)

***



Download Past Papers at : www.freebooks.lk

**2.1.5 வினாத்தாள் I இற்கு விடையளிக்கப்பட்டுள்ள விதம் பற்றிய முழுமையான அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள்**

**வினாத்தாள் I இற்கான விடையளித்தல் தொடர்பான அவதானிப்பு**




* அடிப்படைக் கோட்பாடுகள் தொடர்பிலான விளக்கத்தைப் பரிட்சிப்பதற்காக உள்ளடக்கப்பட்டிருந்த வினா இலக்கம் 1, 2, 7, 20, 47 போன்ற வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளில் 75% இற்கு மேற்பட்ட வீதத்தினர் விடையளித்துள்ளமை மேலுள்ள வரைபடத்தின் மூலம் உறுதிப்படுத்தப்படுகின்றது.

* வினா இலக்கம் 3, 34, 44, 48, 49 போன்ற வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளில் 20% த்திற்கும் குறைந்த வீதத்தினர் சரியாக விடையளித்துள்ளனர் என்பது மேலுள்ள வரைபின் மூலம் அறிய முடிகிறது. அதில் வினா இலக்கம் 44, 49 என்பவற்றிற்கு 10% த்திற்கும் குறைந்த விண்ணப்பதாரிகளே சரியாக விடையளித்துள்ளனர். நியமங்களுக்கும் எண்ணக்கருக்களுக்குமிடையிலான தொடர்பு, குத்தகைக் கணக்கீட்டுப் பிரச்சினைகள், கிரயம், இலாப எல்லைப்பகுப்பாய்வு என்பவைகள் தொடர்பிலான அறிவு போதுமானதாக இல்லை என்பது இதன் மூலம் தெளிவாகின்றது.

* வினா இலக்கம் 05, 10, 11, 15, 19, 38, 39, 45, 50 போன்ற வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளில் 40% - 50%த்திற்கு இடைப்பட்ட வீதத்தினர் சரியாக விடையளித்துள்ளனர். இவ்வினாக்களின் மூலம் கணக்கீட்டு சமன்பாடு, நிதி அறிக்கைப்படுத்தலின் எண்ணக்கரு ரீதியான சட்டகம், இருப்பு விநியோகத்தின் விலையிடல் முறைகள், பங்குடமைச் சட்டத்தின் விதிமுறைகள், பங்கு வழங்கல், அங்கத்துவச் சந்தா சீராக்கம், விகிதப்பகுப்பாய்வு, முதலீட்டு மதிப்பீட்டின் நுட்பமுறைகள் என்பவைகள் தொடர்பில் காணப்படுகின்ற அறிவு, விளக்கத்தைப் பரிட்சிப்பதற்கே முயற்சி எடுக்கப்பட்டுள்ளது.

* கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளின்போது மாணவர்களுக்கு கணக்கீட்டுப் பயிற்சிகளை முன்வைக்கும் சந்தர்ப்பத்தில் செயற்பாட்டு மட்டத்திலான தேர்ச்சிகளை அடிப்படையாகக் கொண்ட பிரச்சினைகள் வழங்கப்படுமாயின் சிறப்பாக விடையளிப்பதற்கு அது அவர்களுக்கு உதவியாக அமையும்.



Download Past Papers at : www.freebooks.lk

## 2.1.6 வினாத்தாள் I இல் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்குரிய விடைத் தெரிவுக்கான துலங்கல்கள் (சதவீதத்தில்)

| வினா இலக்கம் | சரியான தெரிவு | ஒவ்வொரு தெரிவும் செய்யப்பட்ட மாணவர் சதவீதம் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | விடையளிக்காத |
| 1 | 5 | 2% | 3% | 15% | 4% | **76%** | |
| 2 | 1 | **76%** | 5% | 8% | 8% | 3% | |
| 3 | 5 | 4% | 12% | 28% | 37% | **19%** | |
| 4 | 1 | **68%** | 19% | 7% | 3% | 3% | |
| 5 | 1 | **43%** | 6% | 5% | 43% | 3% | |
| 6 | 2 | 7% | **67%** | 8% | 14% | 3% | 1% |
| 7 | 3 | 6% | 3% | **78%** | 4% | 9% | |
| 8 | 1 | **66%** | 8% | 6% | 7% | 12% | 1% |
| 9 | 4 | 13% | 27% | 14% | **38%** | 7% | 1% |
| 10 | 1 | **48%** | 6% | 9% | 3% | 34% | |
| 11 | 3 | 6% | 30% | **47%** | 8% | 7% | 2% |
| 12 | 4 | 13% | 30% | 12% | **35%** | 10% | |
| 13 | 2 | 11% | **36%** | 32% | 16% | 5% | |
| 14 | 1 | **54%** | 22% | 9% | 8% | 6% | 1% |
| 15 | 1 | **44%** | 16% | 25% | 6% | 9% | |
| 16 | 4 | 3% | 14% | 10% | **59%** | 13% | 1% |
| 17 | 5 | 8% | 38% | 21% | 8% | **23%** | 2% |
| 18 | 1 | **58%** | 15% | 9% | 8% | 9% | 1% |
| 19 | 1 | **40%** | 12% | 10% | 10% | 28% | |
| 20 | 2 | 3% | **75%** | 4% | 3% | 15% | |
| 21 | 5 | 13% | 10% | 8% | 11% | **57%** | 1% |
| 22 | 3 | 32% | 14% | **29%** | 6% | 19% | |
| 23 | 3 | 5% | 9% | **57%** | 20% | 8% | 1% |
| 24 | 3 | 18% | 13% | **30%** | 15% | 24% | |
| 25 | 4 | 18% | 8% | 12% | **56%** | 5% | 1% |
| 26 | 2 | 17% | **62%** | 9% | 9% | 2% | 1% |
| 27 | 5 | 5% | 9% | 22% | 27% | **36%** | 1% |
| 28 | 2 | 18% | **54%** | 11% | 9% | 7% | 1% |
| 29 | 2 | 8% | **59%** | 14% | 7% | 11% | 1% |
| 30 | 5 | 2% | 7% | 15% | 16% | **69%** | 1% |

**அட்டவணை** 01

இலக்கம் 1 தொடக்கம் 30 வரையிலான வினாக்களுக்கான துலங்கல்களாக ஒவ்வொரு தெரிவினையும் தெரிவுசெய்த விண்ணப்பதாரிகளின் வீதமானது மேலுள்ள அட்டவணை 01 இல் காட்டப்பட்டுள்ளது. அவற்றில் வினாக்களுக்குரிய சரியான தெரிவினை தெரிவு செய்த வீதமானது இங்கு நிழற்றிக் காட்டப்பட்டுள்ளது. அவற்றில் விசேடமாக இனம் காணப்பட்ட வினாக்கள் தொடர்பிலான பகுப்பாய்வுகள் கீழே காட்டப்பட்டுள்ளது.

வினா இலக்கம் 03 இற்கான சரியான விடையாகிய 05 ஆம் தெரிவினை தெரிவு செய்த விண்ணப்பதாரிகளில் 19% ம் மாத்திரமேயாகும். வினாவினை சரியாக விளங்கிக் கொள்ளாமையால் விண்ணப்பதாரிகளில் 37% மானோர் 4ஆம் தெரிவினையும், 28% மானோர் 3 ஆம் தெரிவினையும் சரியான விடையாகத் தெரிவு செய்திருந்தனர். பொறுப்புச் சான்றிதழுக்கேற்ப ஒதுக்கங்களை மேற்கொள்ளும் கணக்கீட்டு எண்ணக்கரு தொடர்பிலான சிறப்பான விளக்கம் குறைந்த மட்டத்திலிருப்பதை இதன் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. இதற்கான அடிப்படைக் காரணம் கணக்கீட்டு எண்ணக்கருக்களை செயற்பாட்டு நிதியில் பயன்படுத்துவது தொடர்பில் விண்ணப்பதாரிகளில் காணப்படுகின்ற விளக்கமின்மையேயாகும் என்பதை அறியக்கூடியதாகவுள்ளது. கணக்கீட்டு எண்ணக்கருக்கள், அவற்றின் பயன்பாடு என்பவை தொடர்பிலான கற்றல்-கற்பித்தல் செயற்பாடுகளை வகுப்பறையில் ஒழுங்குபடுத்தும்போது உதாரணங்களுடன் அவற்றை முன்வைப்பதன் மூலம் இப்பலவீனத்தை தவிர்த்துக் கொள்ளலாம்.



Download Past Papers at : www.freebooks.lk

வினா இலக்கம் 17 ற்கு 5 வது தெரிவினை தெரிவு செய்த விண்ணப்பதாரிகளின் எண்ணிக்கை ஏறக்குறைய 23% மாத்திரமேயாகும்.

வினாவினை சரியாக விளங்கிக் கொள்ளாமையால் விண்ணப்பதாரிகளில் 38% மானோர் 2 வது தெரிவினையும், 21% மானோர் சரியான விடையாக 3 வது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். அதற்கேற்ப 77% ஆன விண்ணப்பதாரிகளில் கூடுதலான வீதத்தினர் பிழையான விடையினைத் தெரிவு செய்தமைக்கான காரணம் பங்காளர்களின் உரிமை அதிகரிப்பின் அளவினைக் கணிக்கும்போது நன்மதிப்பினை புத்தகங்களிலிருந்து அகற்றினாலும் பங்காளர்களின் மொத்த உரிமையின் பகுதியொன்றாக கவனத்தில் கொண்டமையாகும். நன்மதிப்பினை மூலதனக் கணக்கினூடாக சீராக்குவதன் மூலம் பங்காளர்களின் உரிமையில் மாற்றம் ஏற்பட்டாலும் மொத்த உரிமையில் மாற்றமொன்று ஏற்படாது என்பது தொடர்பிலான விளக்கத்தை மாணவர்களுக்கு பெற்றுக் கொடுத்தல் மிக முக்கியமாகும்.

வினா இலக்கம் 22 இற்கான சரியான விடையாகிய 3வது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 29% மானோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். வினாவினை சரியாக விளங்கிக் கொள்ளாமையால் விண்ணப்பதாரிகளில் 32% மானோர் 1வது தெரிவினையும், 19% மானோர் 5வது தெரிவினையும் சரியான விடையாக தெரிவு செய்திருந்தனர். அதற்கேற்ப விண்ணப்பதாரிகளில் கூடிய வீதத்தினர் பிழையான விடையினைத் தெரிவு செய்தமைக்கான காரணம் நிதிக் கூற்றுக்களில் பொறுப்பொதுக்கத்தினை இனம் காணுதல் தொடர்பிலான விளக்கம் இழிவு மட்டத்திலிருந்தமையினாலாகும். இவ்வாறான வினாக்களுக்கு விடையளிப்பதற்கான தேர்ச்சியினை அதிகரிப்பதற்கு LKAS 37 தொடர்பிலான விளக்கத்தினை நடைமுறை ரீதியான உதாரணங்களுடன் முன்வைத்து வழங்குவது முக்கியமானதாகும். அத்துடன் பாடம் தொடர்பில் முன்னேற்றம் ஏற்படக்கூடியவாறு கற்றல்-கற்பித்தல் செயற்பாடானது ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.

வினா இலக்கம் 24 இற்கான 3வது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 30% மானோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். வினாவினைசரியாக விளங்கிக் கொள்ளாமையினால் விண்ணப்பதாரிகளில் 24% மானோர் 5வது தெரிவினையும், 18% மானோர் சரியான விடையாக 1வது தெரிவினையும், 15% மானோர் சரியான விடையாக 4வது தெரிவினையும் தெரிவு செய்திருந்தனர். கொடுக்கல் வாங்கல்கள், நிகழ்வுகள் என்பன நடைமுறைச் சொத்து, நடைமுறைப் பொறுப்புக்களில் ஏற்படுகின்ற தாக்கங்களை சரியாக இனம்காண முடியாமையினாலே விண்ணப்பதாரிகளில் கூடிய வீதத்தினர் பிழையான விடையினைத் தெரிவு செய்தமைக்கு காரணமாயிருக்கலாம். இப்பலவீனத்தை நீக்குவதற்கு கணக்கீட்டு விகிதங்களை கணிப்பிடுவதிலுள்ள பிரச்சினைகளில் மாத்திரம் கற்பித்தலை வரையறுக்காது விகிதங்கள் உருவாக்கப்பட்டுள்ள முறை, அவற்றின் கருத்துக்கள் என்பவைகள் விளங்கக் கூடியவாறு கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளைத் திட்டமிடல் வேண்டும்.

வினா இலக்கம் 12 இற்கான சரியான விடையாகிய 4வது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 35% மானோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். வினாவினை சரியாக விளங்கிக் கொள்ளாமையினால் விண்ணப்பதாரிகளில் 30% மானோர் 2வது தெரிவினை சரியான தெரிவாக தெரிவு செய்திருந்தனர். இதற்கு காரணமாவது LKAS 16 ற்கேற்ப ஆதனம் பொறி மற்றும் உபகரணங்ககளை ஆரம்பத்தில் இனம்காணக்கூடிய கிரயம் தொடர்பில் சரியான விளக்கமின்மையினாலேயே விண்ணப்பதாரிகளில் 65% மானோர் பிழையான விடையினைத் தெரிவு செய்திருந்தமைக்கான காரணமாயமைந்திருக்கலாம். இதற்கேற்ப செயற்பாட்டு ரீதியான உதாரணங்களைப் பயன்படுத்தி கணக்கீட்டு நியமங்கள் தொடர்பிலான விரிவான விளக்கமொன்றைப் பெற்றுக்கொடுக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் முக்கியமானதாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

வினா இலக்கம் 13 இற்கான சரியான விடையாகிய 2 வது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 36% மானோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். வினாவினை சரியாக விளங்கிக் கொள்ளாமையினால் விண்ணப்பதாரிகளில் 32% மானோர் 3 வது தெரிவினை சரியான விடையாக தெரிவு செய்திருந்தனர். இதற்கேற்ப இருப்புக்களின் மாற்றமானது (குறைவு / அதிகரிப்பு) முதற் கிரயத்திலும் விற்பனைக் கிரயத்திலும் ஏற்படுகின்ற தாக்கம் தொடர்பிலான விளக்கம் குறைந்த மட்டத்தில் காணப்பட்டமையினாலேயே அதிகமானோர் பிழையான விடையினைத் தெரிவு செய்தமைக்கு காரணமாகயிருக்கலாம். அதற்கேற்ப கிரய அமைப்பு முறைமை தொடர்பில் தேவையான செயற்பாட்டு அறிவினைப் பெற்றுக் கொடுக்கக் கூடியவாறு கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 27 ற்கான சரியான விடையாகிய 5 வது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 36%மானோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். இவ்வினாவினை சரியாக விளங்கிக் கொள்ளாமையினால் விண்ணப்பதாரிகளில் 27% மானோர் 4 வது தெரிவினையும், 22% மானோர் 3 வதுதெரிவினையும் சரியான விடையாகத் தெரிவு செய்திருந்தனர். இதற்கேற்ப அதிகமானோர் பிழையான விடையினைத் தெரிவு செய்தமைக்கு உறிஞ்சல் கிரயத்தினை உள்ளடக்கி அலகுக் கிரயத்தினைப் பெற்றுக் கொள்ளும் செயற்பாடு தொடர்பிலான விளக்கம் குறைவாக இருந்தமையே காரணமாயிருக்கலாம்.

வினா இலக்கம் 19 ற்கான சரியான விடையாகிய 1 வது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 40% மானோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். வினாவினை சரியாக விளங்கிக் கொள்ளாமையினால் விண்ணப்பதாரிகளில் 28% மானோர் 5 வது தெரிவினை சரியான விடையாகத் தெரிவு செய்திருந்தனர். இதற்கேற்ப பங்கு வழங்கல் தொடர்பிலான விளக்கம் குறைவாக இருந்தமையே அதிகமானோர் பிழையான விடையினைத் தெரிவு செய்தமைக்குக் காரணம் என்பது தெரியவருகின்றது. அத்துடன் சில பரீட்சார்த்திகள் இதனை உபகாரப்பங்கு வழங்கலாகக் கருதி 5 வது தெரிவினை தமது விடையாக தெரிவு செய்திருக்கலாம் எனவும் எண்ணத் தோற்றுகின்றது. இதற்கேற்ப கணக்கு வைப்பின்போது உபகார வழங்கல் உரித்து வழங்கல் என்பவைகளுக்கிடையிலான வேறுபாடு சிறப்பாக விளங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டினை ஒழுங்கமைத்தல் முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 15 இற்கான சரியான விடையாகிய 1 வது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 44% மானோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். வினாவினை சரியாக விளங்காமையினால் விண்ணப்பதாரிகளில் 25% மானோர் 3 வது தெரிவினை சரியான விடையாகத் தெரிவு செய்திருந்தனர். இதற்கேற்ப அதிகமானோர் பிழையான விடையினைத் தெரிவு செய்தமைக்கான காரணம் பரீட்சார்த்திகளில் சிலர் இலாப நட்டப்பகிர்வு இலாபக் கணிப்பீடு போன்ற சந்தர்ப்பங்களை சரியாக விளங்கியிருக்காமையேயாகும் என்பது புலனாகின்றது. இலாபத்தைக் கணிப்பிடல், கணிப்பிட்ட இலாபத்தை பகிர்தல் போன்ற எண்ணக்கருக்களுக்கிடையிலான வேறுபாடுகள் சரியாக விளங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் மிக முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 11 இற்கு சரியான விடையாகிய 3 வது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 47% மானோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். இருப்புக்கள் தொடர்பிலான நியமத்திற்கேற்ப கிரய சூத்திரத்தினைப் பயன்படுத்தி இருப்புக்கிரயத்தினைக் கணிப்பிடுவது தொடர்பிலான அறிவு போதுமானதாக இல்லையென்பது இதன் மூலம் தெரியவருகின்றது. அதற்கேற்ப கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டின்போது இது தொடர்பில் கவனம் செலுத்துதல் அவசியமானதாகும்.

வினா இலக்கம் 14 இற்கான சரியான விடையாகிய 1 வது தெரிவினை விண்ணப்பதாரிகளில் 54%மானோர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். கிரயத்தினடிப்படையில் வழங்கப்பட்ட இலாப வீதத்தினை விற்பனைக்கு சீராக்குவதற்குரிய விளக்கம் குறைவாக இருந்தமையே விண்ணப்பதாரிகளில் 46% மானோர் பிழையான தெரிவினை தெரிவு செய்தமைக்கான காரணமாயிருக்கலாம். கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளின்போது வீதங்களைக் கணிப்பிடுவதில் மாத்திரம் தங்கியிருக்காது வீதங்கள் தொடர்பில் விரிவான விளக்கமொன்றைப் பெற்றுக் கொடுத்தல் மிக முக்கியமானதாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

5 வது வினாவிற்கான சரியான விடையாகிய 1 வது தெரிவிற்கு 43% மாணவர் துலங்கலைக் காட்டியுள்ளதுடன், தெரிவு 4 இற்கு 43% மாணவர் துலங்கலைக் காட்டியுள்ளனர். இதற்குக் காரணம் பட்டியலிடப்பட்ட விலையிலிருந்து வியாபாரக் கழிவினைக் கழித்து வரும் தொகையினை கணக்குகளில் பதிவு செய்தல் வேண்டும் என்பது தொடர்பிலான விளக்கம் காணப்படாமையினாலேயாகும். காசுக்கழிவு, வியாபாரக்கழிவு என்பவற்றுக்கிடையிலான வேறுபாடுகள் விளங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் மிக முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 8, 9 என்பவற்றிற்கு வழங்கப்பட்ட தகவல்களின் அடிப்படையிலேயே விடையளிக்க வேண்டியிருந்தது. வினா இலக்கம் 8 ற்கான சரியான விடையாகிய 1 வது தெரிவிற்கு 66% மாகிய உயர் துலங்கலொன்று காணப்பட்டாலும், வினா இலக்கம் 9 ற்கான சரியான விடையாகிய 4 வது தெரிவினை 38% மாணவர் மாத்திரமே தெரிவு செய்திருந்தனர். இரு நிதியாண்டுகளுக்கான தகவல்களை அடிப்படையாகக் கொண்டு குறித்த கால இடைவெளிகளுக்குரிய காரணிகளைத் தரவுகளாக உருவாக்கி கொள்கின்ற ஆற்றல் குறைந்த மட்டத்தில் காணப்பட்டமையே இதற்கான காரணமாகும். வணிகமொன்றின் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு செய்யும் தொடர் செயற்பாடு தொடர்பிலான விரிவான விளக்கத்தினைப் பெற்றுக் கொள்ளும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளைப் பயன்படுத்துதல் முக்கியமானதாகும்.

வினா இலக்கம் 10 இற்கான சரியான விடையாகிய 1 வது தெரிவினை தெரிவு செய்தவர்களின் விகிதம் 48% என்பதுடன், விண்ணப்பதாரிகளில் 34% மாணவர் 5 வது தெரிவினை சரியான விடையாக தெரிவு செய்திருந்தனர். நிதிக்கூற்றுக்களைத் தயாரித்தல், முன்வைத்தல் என்பது தொடர்பிலான மாதிரிச் சட்டகத்தின் அடிப்படைப்பண்புகள் தொடர்பிலான விளக்கம் காணப்படாமையே அதற்குரிய காரணமாக இருக்கலாம். நிதிக்கூற்றுக்களை தயாரித்தலும் முன்வைத்தலும் மாதிரிச் சட்டகம் தொடர்பிலான விரிவான விளக்கத்தினைப் பெற்றுக்கொடுக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் மிக முக்கியமானதாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

**2.1.7 வினாத்தாள் I இல் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு புள்ளிகள் வழங்கப்பட்டுள்ள விதம்.**

| வினா இலக்கம் | புள்ளிகள் பெற்றுள்ள சதவீதம் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | புள்ளி 0 | புள்ளி 1 | புள்ளி 2 | புள்ளி 3 | புள்ளி 4 | விடையளிக்காத |
| 31 | 1% | 11% | 27% | 32% | 29% | |
| 32 | 11% | 21% | 26% | 22% | 18% | 2% |
| 33 | 10% | 9% | 16% | 23% | 39% | 3% |
| 34 | 21% | - | 28% | - | 47% | 4% |
| 35 | 32% | - | 32% | - | 23% | 13% |
| 36 | 35% | - | 39% | - | 10% | 16% |
| 37 | 13% | 18% | 17% | 18% | 29% | 5% |
| 38 | 23% | 11% | 25% | - | 31% | 10% |
| 39 | 40% | - | 22% | - | 29% | 9% |
| 40 | 63% | - | - | - | 22% | 15% |
| 41 | 50% | - | 5% | - | 32% | 13% |
| 42 | 39% | - | 20% | - | 25% | 16% |
| 43 | 68% | - | - | - | 11% | 21% |
| 44 | 68% | - | 6% | - | 6% | 20% |
| 45 | 30% | - | 18% | - | 40% | 12% |
| 46 | 10% | 23% | 25% | 18% | 21% | 3% |
| 47 | 2% | 3% | 6% | 13% | 74% | 2% |
| 48 | 61% | - | 6% | - | 13% | 20% |
| 49 | 67% | - | 1% | - | 5% | 27% |
| 50 | 16% | 30% | 25% | 16% | 10% | 3% |

**அட்டவணை 02**

வினா இலக்கம் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு புள்ளிகள் பெற்றுள்ள முறை மேலே காட்டப்பட்டுள்ள அட்டவணை 02 இல் காட்டப்பட்டுள்ளது. அதற்கேற்ப வினா இலக்கம் 40, 43, 44, 48, 49 என்பவற்றிற்கு புள்ளி 0 (பூச்சியம்) எடுத்த வீதம் 60% த்தையும் விட அதிகமானது என்பது தெரியவருகின்றது.

இதற்கேற்ப தீர்மானமெடுப்பது தொடர்பிலான அறிவினைப் பயன்படுத்தி அவற்றை வேறு சந்தர்ப்பங்களுக்கு மாற்றீடு செய்யும் ஆற்றல் பலவீனமான மட்டத்தில் காணப்படுகின்றது என்பதை அறியக் கூடியதாகவுள்ளது. வினா இலக்கம் 38 இற்குரிய முழுப்புள்ளியாகிய 04 யினை 31% மானோர் மாத்திரமே பெற்றுள்ளனர். எனினும் இவ்வினாவின் தன்மைக்கேற்ப சகல மாணவர்களும் சரியாக விடையளிக்கவேண்டிய வினாவொன்றைாகும். எவ்வாறாயினும் நிதிக் கூற்றுக்களின் அடிப்படைகள் (மூலங்கள்) தொடர்பிலான விரிவான விளக்கமொன்றே உயர்தர மாணவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படுகின்றது.

40 ம் வினாவிற்கு விண்ணப்பதாரிகளில் 63% மானோர் 0 புள்ளியே (பூச்சியம்) பெற்றுள்ளனர். உச்ச புள்ளியாகிய 04 புள்ளியினை விண்ணப்பதாரிகளில் 22% மானோர் மாத்திரமே பெற்றுள்ளனர். நடைமுறைக் கணக்கினது தகவல்களின் அடிப்படையில் தேறிய இலாபத்தைக் கணிப்பிட முடியாமையே அதற்கான காரணமாகும்.

41 ம் வினாவிற்கு 50% மானோர் 0 புள்ளியே (பூச்சியம்) பெற்றுள்ளனர். உச்ச புள்ளியாகிய 04 புள்ளியினை விண்ணப்பதாரிகளில் 32% மானோர் மாத்திரமே பெற்றுள்ளனர். அதற்கான காரணம் இலாபப்பகிர்வும், பகிர்வுக்குரிய இலாபத்தினை காசாக செலுத்தல், கணக்கு வைத்தல் தொடர்பில் காணப்பட்ட விளக்கம் போதாமையினாலேயாகும். அதற்கேற்ப வகுப்பறையினுள் கற்றல் - கற்பித்தில் செயற்பாடுகளை ஒழுங்கமைக்குபோது நடைமுறைக் கணக்கானது பங்காளர்களின் உரிமையின் ஒரு பகுதி என்பதை விளங்கக்கூடிய வகையில் ஒழுங்குபடுத்துதல் மிக முக்கியமாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

43 ஆம் வினாவிற்கு விண்ணப்பதாரிகளின் 68% மானோர் 0 புள்ளியே (பூச்சியம்) பெற்றுள்ளனர். உச்ச புள்ளியாகிய 04 இனை 11% மானோர் மாத்திரமே பெற்றுள்ளனர். கொள்வனவாளரின் புத்தகங்களில் நிதிக் குத்தகைக்கணக்கு வைத்தல் தொடர்பிலான விளக்கமானது மாணவர்களிடம் குறைந்த மட்டத்திலிருப்பதே இதற்கான காரணமாகும் என்பது இதிலிருந்து தெளிவாகின்றது.

44 ஆம் வினாவிற்கு விண்ணப்பதாரிகளின் 68% மானோர் 0 புள்ளியே (பூச்சியம்) பெற்றுள்ளனர். இவ்வினாவிற்கான மொத்தப்புள்ளியாகிய 04 இனை 6% மானோர் மாத்திரமே பெற்றுள்ளனர். நிதிக்குத்தகை வட்டி, வருட முடிவில் குத்தகை பொறுப்பு என்பது தொடர்பிலான விளக்கம் குறைந்த மட்டத்தில் காணப்படுவது வினா இலக்கம் 43 மூலம் விளங்குகின்றது. நிதிக்குத்தகைக் கணக்கு வைத்தலுடன் தொடர்புடைய பயிற்சிகளை வழங்குவதன் மூலம் மாணவர்களுக்கு கூடுதலான விளக்கத்தை பெற்றுக்கொடுப்பது பொருத்தமானதாகும்.

வழங்கப்பட்டுள்ள பொதுவான தகவல்களை பயன்படுத்தி 48 ம் 49 ம் வினாக்களுக்கு விடையளித்தல் வேண்டும். அதற்கேற்ப 48 ம் வினாவிற்கு “ 0 ” புள்ளி பெற்றுள்ளவர்களில் சதவீதம் 61% ஆகவிருப்பதுடன், விண்ணப்பதாரிகளில் 5% மாகிய குறைந்த வீதத்தினர் மாத்திரமே 04 புள்ளிகளைப் பெற்றுள்ளனர். மாறும் பொது மேந்தலைக் கிரயத்தை கவனத்தில் கொள்ளாது மாறும் கிரயம் கணிக்கப்பட்டமையே இவ்வாறு குறைந்த புள்ளிகள் பெற்றமைக்குக் காரணமாய் இருந்திருக்கலாம். அதற்கேற்ப சகல கிரயங்களும் நிலையான மாறும் கிரயங்கள் என இரண்டு பகுதிகளாக வகைப்படுத்தப்படுகின்றன என்பதை மாணவர்களுக்கு விளங்கும் வகையில் செய்றபாட்டு ரீதியான உதாரணங்களை உள்ளடக்கி பயிற்சிகளை உருவாக்குதல் மிகப் பொருத்தமானதாகும்.

விற்பனை விலை அதிகரிப்பு, இயலளவு அதிகரிப்பு என்பவற்றின் மூலம் இலாபத்தில் ஏற்படுத்தும் தாக்கம் (கொள்கைமாறாத பகுப்பாய்வு) தொடர்பில் விண்ணப்பதாரிகளுக்குள்ள விளக்கம் வினா இலக்கம் 49 ல் பரீட்சிக்கப்பட்டுள்ளது. அது தொடர்பிலான விளக்கமானது மத்திய மட்டத்தில் காணப்படுவதனாலேயே விண்ணப்பதாரிகளில் 67% மானோர் அதற்கு புள்ளிகள் எடுத்திருக்கவில்லை. கொள்கை மாறாமை பகுப்பாய்வு தொடர்பான விளக்கத்தை மாணவர்களுக்குப் பெற்றுக் கொடுப்பதற்குப் பொருத்தமான பயிற்சிகளைப் பெற்றுக்கொடுப்பது இங்கு பொருத்தமானதாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

## 2.2 வினாத்தாள் II உம் அதற்கு விடையளிக்கப்பட்டமை தொடர்பான தகவல்களும்

### 2.2.1 வினாத்தாள் II இன் கட்டமைப்பு

நேரம் 3 மணித்தியாலம்

இவ்வினாத்தாள் 07 வினாக்களை கொண்டுள்ளது. முதலாம், இரண்டாம் வினாக்கள் கட்டாயமானவை என்பதுடன், ஒரு வினாவிற்கு 20 புள்ளிகள் வீதம் அவற்றிற்கு 40 புள்ளிகளாகும். ஏனைய 05 வினாக்களில் 04 வினாக்களைத் தெரிவு செய்தல் வேண்டும் என்பதுடன் அவற்றில் ஒரு வினாவிற்கு 15 புள்ளிகள் வீதம் மொத்தம் 60 புள்ளிகளாகும். மொத்தம் 100 புள்ளிகளாகும்.

இறுதிப் புள்ளியினைக் கணிப்பிடல் : வினாத்தாள் I = 100 புள்ளிகள்
வினாத்தாள் II = 100 புள்ளிகள்
இறுதிப் புள்ளிகள் 200 ÷ 2 = 100

* விடைத்தாள் மதிப்பீட்டின் போது சகல வினாக்களுக்கும் புள்ளிகள் இரட்டிப்பாக்கி வழங்கப்படும். அதற்கேற்ப இறுதிப் புள்ளியினைக் கணிப்பிடல் :
வினாத்தாள் I = 200 புள்ளிகள்
வினாத்தாள் II = 200 புள்ளிகள்
இறுதிப் புள்ளிகள் 400 ÷ 4 = 100



Download Past Papers at : www.freebooks.lk

## 2.2.2 வினாத்தாள் II - எதிர்பார்க்கப்பட்ட விடைகள், புள்ளி வழங்கும் திட்டம், விடையளித்தல் தொடர்பான அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள்

**வினாத்தாள் II இல் ஒவ்வொரு வினாக்களுக்கும் விடையளிக்கப்பட்டமை தொடர்பிலான அவதானிப்புகள், வரைபடம் 2, 3, 4. என்பவற்றின் அடிப்படையில் இது தயாரிக்கப்பட்டுள்ளது. வினாக்களுக்கு உரிய வரைபடங்கள் ஒவ்வொரு வினாவினதும் அவதானிப்பு, முடிவுகளுடனும் இங்கு தரப்பட்டுள்ளது.**

### வினாப்பத்திரம் II

### வினா இலக்கம் - 01

**1.** வரையறுத்த நிரோஷன் மனோஜ் பொதுக் கம்பனியின் 31.03.2013 இல் உள்ளவாறான பரீட்சை மீதி கீழே தரப்பட்டுள்ளது

| | வரவு (ரூ. '000) | செலவு (ரூ. '000) |
|---|---|---|
| 31.03.2013 இல் ஆதனம், பொறி மற்றும் உபகரணங்கள் (முன் கொண்டுசெல் தொகையில்) | 5400 | |
| 01.04.2012 இல் சரக்கிருப்பு | 400 | |
| வியாபாரக் கடன்பட்டோர் | 400 | |
| காசும் காசுக்குச் சமமானவைகளும் | 250 | |
| கொள்வனவுகள் | 1500 | |
| ஊழியர் சம்பளங்கள் | 400 | |
| அலுவலக வாடகை | 360 | |
| ஆதனம், பொறி மற்றும் உபகரணம் மீதான நடைமுறை ஆண்டுப் பெறுமானத்தேய்வு | 700 | |
| தொலைபேசிக் கட்டணங்கள் | 40 | |
| இடைக்காலப் பங்கிலாபம் | 180 | |
| விற்பனைத் தரகு | 50 | |
| குத்தகைத் தவணைக் கட்டணம் | 930 | |
| வரி (நடைமுறை ஆண்டின் முதல் மூன்று காலாண்டுகளுக்கும் செலுத்தப்பட்டது) | 50 | |
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | | 2000 |
| 01.04.2012 இல் நிறுத்தி வைத்த வருவாய்கள் | | 1380 |
| குத்தகைக் கடன்கொடுத்தோர் | | 2400 |
| வியாபாரக் கடன்கொடுத்தோர் | | 350 |
| விற்பனைகள் | | 4500 |
| 01.04.2012 இல் ஐயக்கடனிற்கான ஏற்பாடு | | 30 |
| | **10 660** | **10 660** |

**மேலதிக தகவல்கள்:**

(அ) 31.03.2013 இல் ஆதனம், பொறி மற்றும் உபகரணங்களின் உள்ளடக்கம் வருமாறு:

| சொத்து | கிரயம் (ரூபா'000) | திரண்ட பெறுமானத்தேய்வு (ரூபா'000) | முன்கொண்டு செல்தொகை (ரூபா'000) |
|---|---|---|---|
| கட்டடங்கள் | 2000 | 1200 | 800 |
| மோட்டார் வாகனம் (01.04.2012 இல் நிதிக் குத்தகையின் கீழ் வாங்கப்பட்டது) | 2400 | - | 2400 |
| தளபாடம், பொருத்துக்கள் | 1000 | 400 | 600 |
| அலுவலக உபகரணம் (01.04.2012 இல் வாங்கப்பட்டது) | 2000 | 400 | 1600 |
| | **7400** | **2000** | **5400** |



Download Past Papers at : www.freebooks.lk

(ஆ) 31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான ஆதனம், பொறி மற்றும் உபகரணங்களின் மீதான பெறுமானத்தேய்வு பின்வரும் உருப்படிகளை உள்ளடக்கியுள்ளது. சகல சொத்துக்களும் நிர்வாக நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படுகின்றன.

| சொத்து | பெறுமானத்தேய்வு (ரூ.'000) |
|---|---|
| கட்டடம் | 200 |
| தளபாடம், பொருத்துக்கள் | 100 |
| அலுவலக உபகரணம் | 400 |
| | 700 |

நிதிக் குத்தகையின் கீழ் வாங்கப்பட்ட மோட்டார் வாகனத்திற்கு இன்னமும் பெறுமானத்தேய்வு செய்யப்படவில்லை.

(இ) 31.03.2013 இல் முடிவடைந்த வருடத்திற்கான நிதிக்கூற்றுக்களைத் தயாரிக்க முன்னர் பின்வரும் சீராக்கங்கள் செய்யப்படல் வேண்டும்.

(i) 31.03.2013 இல் கட்டடம் ரூபா 1000000 காசுக்கு விற்பனை செய்யப்பட்டது. இத்தொகையானது வங்கிக் கணக்கில் வரவு வைக்கப்பட்டதுடன் விற்பனைக் கணக்கில் செலவு வைக்கப்பட்டது. கட்டடத்தின் கிரயம் மற்றும் திரண்ட பெறுமானத் தேய்வு ஆகியன கணக்குகளில் இருந்து இன்னமும் அகற்றப்படவில்லை.

(ii) மோட்டார் வாகனத்தின் குத்தகைக் காலம் 4 வருடங்கள் என்பதுடன் அதன் எதிர்பார்க்கப்பட்ட பயன்தரு ஆயுட்காலம் 5 வருடங்கள் ஆகும். மோட்டார் வாகனத்தின் உடைமையானது குத்தகைக் காலத்தின் முடிவில் கம்பனிக்கு மாற்றப்படும். வருடாந்த குத்தகைத் தவணைக் கட்டணம் ரூபா 930 000 ஆகும். இவ்வாண்டின் போது செலுத்தப்பட்ட தவணைக் கட்டணமானது, குத்தகைத் தவணைக் கட்டணக் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது. நான்கு ஆண்டு காலப்பகுதிக்கான குத்தகை வட்டி பின்வருமாறு

| ஆண்டு | வட்டி (ரூபா'000) |
|---|---|
| 2012/13 | 480 |
| 2013/14 | 390 |
| 2014/15 | 290 |
| 2015/16 | 160 |

(iii) 31.03.2013 இல் சரக்கிருப்புக்களின் கிரயம் ரூபா 800000 ஆகும். இத்திகதியில் சரக்கிருப்புக்களின் தேறிய தேறத்தக்க பெறுமதி ரூபா 780000 ஆகும்.

(iv) வருட இறுதியில் காணப்படும் வியாபாரக் கடன்பட்டோர் மீதியின் மீது ஐயக்கடனுக்காக 10% ஏற்பாடு செய்வது கம்பனியின் கொள்கை ஆகும்.

(v) கம்பனியானது இரண்டு வருடங்களுக்கான வாடகை முழுவதையும் 01.04.2012 இல் ஒரே தடவையில் செலுத்தி கட்டடமொன்றை அலுவலகப் பாவனைக்காக வாடகைக்குப் பெற்றுள்ளது. செலுத்தப்பட்ட தொகை முழுவதும் அலுவலக வாடகைக் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது.

(vi) 2013 மார்ச் மாதத்திற்கான தொலைபேசிக் கட்டணங்கள் ரூபா 10000 செலுத்தப்படல் வேண்டும்.

(vii) கம்பனியானது பொருட்களை ஒரு வருட உத்தரவாதத்துடன் விற்பனை செய்கின்றது. நியாயமான மதிப்பிடலின் பிரகாரம் கம்பனியானது விற்பனைப் பெறுமதியின் 2% ஐ உத்தரவாதத்திற்கான ஏற்பாடாக செய்தல் வேண்டும்.

(viii) நிறுத்தி வைத்த வருவாய்களை மூலதனமாக்குவதன் மூலம் தற்போதைய பங்குதாரர்களுக்கு பங்கொன்று ரூபா 50 வீதம் 20000 சாதாரண பங்குகளை கம்பனி வழங்கியுள்ளது.

(ix) 31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான வருமான வரியானது, வரிக்கு முந்திய இலாபத்தின் $\frac{1}{4}$ ஆக மதிப்பிடப்பட்டுள்ளது.

**வேண்டப்படுவது:**

வரையறுத்த நிரோஷன் மனோஜ் பொதுக் கம்பனியின் பிரசுரித்தல் நோக்கத்திற்கான பின்வரும் நிதிக்கூற்றுக்கள் (குறிப்புக்கள் உட்பட):

(1) 31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான வருமானக் கூற்று

(2) 31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான உரிமையாண்மை மாற்றற் கூற்று

(3) 31.03.2013 இல் உள்ளபடியான நிதிநிலைமைக் கூற்று (ஐந்தொகை)

*(20 புள்ளிகள்)*



Download Past Papers at : www.freebooks.lk

**வினா இலக்கம் 01 இற்கான உத்தேச விடைகளும் புள்ளித்திட்டமும்**

(1)

வரையறுத்த நிரோஷன் மனோஜ் பொதுக்கம்பனி

31.03.2013ல் முடிவடைந்த ஆண்டிற்கான வருமானக்கூற்று (01)

(ரூ.'000)

| | குறிப்பு | | | | |
|---|---|---|---|---|---|
| விற்பனை | | | 3 500 | (01) | → செய்கையை பார்க்குக |
| விற்பனைக் கிரயம் | | | (1 100) | (02) | |
| மொத்தலாபம் | | | (01) 2 400 | | |
| பிறதொழிற்பாட்டு வருமானங்கள் | 01 | | 200 | (01) | |
| | | | 2 600 | | |
| விநியோகக் கிரயம் | | 130 | (02) | | → செய்கையை பார்க்குக |
| நிர்வாகச் செலவுகள் | | 1 | (04) | | |
| ஏனைய தொழிற்பாட்டுச் செலவுகள் | | 810 | (01) | | |
| நிதிச் செலவுகள் | | 20 | (01) (2 440) | | |
| வரிக்குமுன் செயற்பாட்டுலாபம் | 02 | 480 | 160 | | |
| வருமானவரி | | | (01) (40) | | → பெற்ற இலாபத்தில் 1/4 இற்கு புள்ளி உண்டு |
| ஆண்டுக்கான இலாபம் (01) | | | 120 | | |

குறிப்பு 01

பிற தொழிற்பாட்டு வருமானம்

கட்டிட விற்பனைலாபம் ரூ. 200

குறிப்பு 02

வரிக்குமுன் செயற்பாட்டு இலாபம் பின்வரும் செலவுகள் கழித்த பின்

| | (ரூ 000) |
|---|---|
| ஆதனம், பொறி உபகரண பெறுமானத்தேய்வு | 480 |
| விற்பனை உத்தரவாதம் | 20 |
| இருப்பு பெறுமதி வீழ்ச்சி நட்டம் | 70 |
| குத்தகைவட்டி, ஐயக்கடன் | 1 180 |

(01)

**ஏதாவது 2 விடயத்திற்கு 02 புள்ளிகள்.**

**(18 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

செய்கை (ரூ.'000) :

விற்பனைக் கிரயம்

| | | |
|---|---|---|
| ஆரம்ப இருப்பு | 400 | (01) |
| கொள்வனவு | 1 500 | |
| | 1 900 | |
| இறுதியிருப்பு | (800) | (01) |
| | 1 100 | |

| | விநியோகச் செலவு | நிர்வாகச் செலவு | ஏனைய செலவுகள் | நிறுத்தி வைத்த வருமானங்கள் |
|---|---|---|---|---|
| ஐயக்கடன் | 10 (01) | | | |
| பொறுப்புச் சான்றிதழுக்கேற்ப ஒதுக்கம் | 70 (01) | | | |
| விற்பனைத்தரகு | 50 | | | |
| இருப்பு நட்டம் | | | 20 (01) | |
| குத்தகை வட்டி | | | | 480 (01) |
| அலுவலக வாடகை | | 180 (01) | | |
| தொலைபேசி கட்டணம் | | 50 (01) | | |
| ஊழியர் சம்பளம் | | 400 | | |
| தேய்வு (700 + 480) [01] [01] | | 1 180 (02) | | |
| | 130 | 1 810 | 20 | 480 |

(2) **வரையறுத்த நிரோஷன் மனோஜ் பொதுக்கம்பனியின்**
**31/3/2013ல் முடிவடைந்த ஆண்டிற்கான**
**உரிமையாண்மை மாற்றக் கூற்று**

(ரூ 000)

| | கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | நிறுத்திவைத்த வருமானங்கள் | மொத்தம் |
|---|---|---|---|
| 1/4/2012ல் மீதி | 2 000 | 1 380 | 3 380 |
| ஆண்டுக்கான இலாபம் | - | (01) 120 | 120 |
| உபகாரப்பங்கு வழங்கல் | 1 000 | (1 000) | - |
| செலுத்திய இடைக்காலப் பங்குலாபம் | - (01) | (180) (01) | (180) |
| | 3 000 (01) | 320 | 3 320 |

(ரூ 000)



Download Past Papers at : www.freebooks.lk

(3) வரையறுத்த நிரோஷன் மனோஜ் பொதுக்கம்பனி

31/03/2013 இல் உள்ளவாறான நிதி நிலைமைக்கூற்று (01)

| | குறிப்பு | | (ரூ 000) |
|---|---|---|---|
| **நடைமுறை அல்லாத சொத்துக்கள்** | குறிப்பு | | |
| ஆதனம் பொறி மற்றும் உபகரணங்கள் | 03 | | (01) 4 120 → பெற்ற இலாபம் |
| **நடைமுறைச் சொத்துக்கள்** | | | |
| கையிருப்பு | | 780 (01) | |
| கடன்பட்டோர் (400-40) | | 360 (01) | |
| முற்பண வருமானவரி | | 180 (01) | |
| முற்பண வாடகை | | (01) 10 | → பெற்ற இலாபம் |
| காசும் காசுக்குச் சமனானவை | | 250 | 1 580 |
| | | | 5 700 |
| **உரிமையாண்மையும் பொறுப்புக்களும்** | | | |
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | | | (01) 3 000 } → பெற்ற இலாபம் |
| நிறுத்திவைத்த வருமானம் | | | (01) 320 } |
| **நடைமுறை அல்லாத பொறுப்புக்கள்** | | | |
| குத்தகைக் கடன்கொடுத்தோர் | | | 1 410 (01) |
| **நடைமுறைப் பொறுப்புக்கள்** | | | |
| குத்தகைக் கடன்கொடுத்தோர் | | 540 (01) | |
| வியாபாரக் கடன்கொடுத்தோர் | | 350 | |
| அட்டுறு தொலைபேசிக் கட்டணம் | | 10 | |
| விற்பனை உத்தரவாத ஏற்பாடு | | 70 | |
| | | | (01) 970 |
| | | | (01) 5 700 |



Download Past Papers at : www.freebooks.lk

குறிப்பு : 03 - ஆதனம் பொறி மற்றும் உபகரணம்

(ரூ.'000)

| கிரயம் | 2012.04.01 மீதி | சேர்த்தல் | அகற்றுதல் | 2013.03.31 மீதி |
|---|---|---|---|---|
| கட்டடம் | 2000 | - | (2000) (01) | - |
| மோட்டார் வாகனம் | - | 2400 (01) | - | 2400 |
| தளபாட இணைப்புக்கள் | 1000 | - | - | 1000 |
| காரியாலய உபகரணம் | - | 2000 (01) | - | 2000 |
| | 3000 | 4400 | (2000) | 5400 |
| தேய்வு ஏற்பாடு | 2012.04.01 மீதி | வருடத்திற்கான தேய்வு | அகற்றுதல் | 2013.03.31 மீதி |
| கட்டடம் | 1000 | 200 | (1200) (01) | - |
| மோட்டார் வாகனம் | - | 480 (02) | - | 480 |
| தளபாட இணைப்புக்கள் | 300 | 100 | - | 400 |
| காரியாலய உபகரணம் | - | 400 | - | 400 |
| | 1300 | 1180 | (1200) | 1280 |
| 2013.03.31 திகதியில் தேறிய பெறுமதி | 1700 | 3220 | 800 | 4120 |

**(18 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**1 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு புள்ளிகள் ஒதுக்கப்பட்டுள்ள முறை 20 x 2 = 40 ஆகும்.

1ம் வினா கட்டாய வினாவாயினும் அதற்கு விண்ணப்பதாரிகளின் 99% மாத்திரமே விடையளித்துள்ளனர். இவ்வினாவிற்கு ஒதுக்கப்பட்ட புள்ளிகள் 40 ஆகும்.

அதில் 00 - 10 புள்ளி ஆயிடையில் 36% ம்,
11 - 20 புள்ளி ஆயிடையில் 25% ம்,
21 - 30 புள்ளி ஆயிடையில் 24% ம்,
31 - 40 புள்ளி ஆயிடையில் 15% ம்,
என்றவாறு புள்ளிகள் கிடைக்கப் பெற்றுள்ளன. இவ்வினாவிற்கு 31 புள்ளிகள் அல்லது அதற்கும் மேலாக புள்ளிகளைப் பெற்றவர்களின் தொகை 15% இருந்ததுடன், விண்ணப்பதாரிகளின் 36% மானோர் 10 புள்ளிகள் அல்லது அதனை விடவும் குறைவான புள்ளிகளையே பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 3 உபபிரிவுகள் காணப்படுவதுடன், அம்மூன்று உபபிரிவுகளினதும் இலகுதன்மை 40% த்தை விடக் கூடுதலானதாகும். இலகுதன்மை குறைவான உபபகுதியாக (3) இருப்பதுடன், அதன் இலகுதன்மை 42% மாகும். இலகுதன்மை கூடிய உபபிரிவாக (1) இருப்பதுடன், அதன் இலகுதன்மை 49% ஆகும்.

பகுதி 1 இன் இலகுதன்மை 49% மாக இருப்பதுடன், நிதிக் குத்தகை அடிப்படையில் உரித்தாக்கிக் கொண்ட மோட்டார் வாகனத்திற்கு பெறுமானத் தேய்வுத் தொகையினை சரியாகக் கணக்கிடாமை, பொறுப்புச் சான்றிதழுக்கு சரியாக ஒதுக்கீட்டினை மேற்கொள்ளாமை போன்ற மாணவர்கள் செய்துள்ள தவறுகளே இதற்குரிய பிரதான காரணங்களாகக் குறிப்பிடலாம். கம்பனி நிதிக்கூற்றுக்களைத் தயாரிக்கும்போது கவனத்தில் கொள்ளப்படுகின்ற கணக்கீட்டு நியமங்கள் தொடர்பிலான விளக்கம் விண்ணப்பதாரிகளிடம் குறைந்த மட்டத்தில் காணப்படுவதனால் அந்நியமங்கள் தொடர்பிலான விளக்கத்தை உறுதிப்படுத்தும் வகையில் கற்றல் - கற்பிதல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் வேண்டும்.

பகுதி 3 இன் நிதி நிலமைக் கூற்றில் குத்தகைக் கடன் கொடுநரை நடைமுறைப் பொறுப்பு, நடைமுறை அல்லாத பொறுப்பு என்ற வகையில் வெவ்வேறாக இனம்காணாமை, உத்தரவாதச் சான்றிதழுக்கான ஒதுக்கத்தினை சரியாக இனம் காணாமை போன்ற பலவீனங்கள் விண்ணப்பதாரிகளிடம் காணப்படுவது தெரியவந்துள்ளது. நிதிக் குத்தகையின் கீழ் கொள்வனவாளர்கள் ஏடுகளில் கணக்குப் பதிவுகளை மேற்கொள்வது தொடர்பிலான அறிவு போதுமானதாக இல்லை. என்பதனால், கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளினூடாக அந்த அறிவானது பெற்றுக் கொடுக்கப்படல் வேண்டும்.



Download Past Papers at : www.freebooks.lk

## வினா இலக்கம் - 02

2. (அ) **மகேந்திரன், நரேந்திரன், ராஜிதன்** ஆகியோர் இலாப நட்டங்களை 5:3:2 என்ற விகிதத்தில் பகிரும் வியாபார நிறுவனமொன்றின் பங்காளர்கள் ஆவர். 31.03.2012 இல் உள்ளபடியான பங்குடைமையின் நிதி நிலைமைக் கூற்று (ஐந்தொகை) பின்வருமாறு.

| | ரூபா'000 | ரூபா'000 |
|---|---|---|
| **நடைமுறையல்லாச் சொத்துக்கள்** | | |
| ஆதனம், பொறி மற்றும் உபகரணம்-கிரயத்தில் | 1000 | |
| திரண்ட பெறுமானத்தேய்வு | (200) | 800 |
| **நடைமுறைச் சொத்துக்கள்** | | |
| சரக்கிருப்பு | 200 | |
| வியாபாரக் கடன்பட்டோர் | 450 | |
| காசு | 60 | 710 |
| | | 1510 |
| **மூலதனக் கணக்குகள்** | | |
| மகேந்திரன் | 200 | |
| நரேந்திரன் | 400 | |
| ராஜிதன் | 200 | 800 |
| **நடைமுறைக் கணக்குகள்** | | |
| மகேந்திரன் | 150 | |
| நரேந்திரன் | 100 | |
| ராஜிதன் | 60 | 310 |
| **நடைமுறையல்லாப் பொறுப்புக்கள்** | | |
| நரேந்திரன் - கடன் 5% | | 200 |
| **நடைமுறைப் பொறுப்புக்கள்** | | |
| வியாபாரக் கடன்கொடுத்தோர் | | 200 |
| | | 1510 |

**மேலதிக தகவல்கள் :**

(i) 01.04.2012 இல் ராஜிதன் பங்குடைமையில் இருந்து இளைப்பாறினார். ராஜிதனுக்குச் செலுத்த வேண்டிய தொகையைக் கடனாகக் கருதுவதற்கும் அதற்கு 5% வருடாந்த வட்டி செலுத்துவதற்கும் உடன்பட்டுக் கொள்ளப்பட்டது. இத்தினத்தில் பங்குடைமையின் நன்மதிப்பானது ரூ. 1200000 ஆக மதிப்பிடப்பட்டுள்ளதுடன் இது தொடர்பான சகல சீராக்கங்களும் பங்காளர் மூலதனக் கணக்குகளினூடாக மேற்கொள்ளப்படுதல் வேண்டும்.

(ii) மகேந்திரனும், நரேந்திரனும் பின்வரும் நிபந்தனைகளின் கீழ் பங்குடைமையைத் தொடர உடன்பட்டனர்.
   (அ) ஒவ்வொரு பங்காளரும் ரூ. 120000 வருடாந்த சம்பளத்திற்கு உரித்துடையவர்கள்.
   (ஆ) இலாப நட்டங்கள் சமமாகப் பகிரப்படல் வேண்டும்.

(iii) இவ்வாண்டில் மகேந்திரனும், நரேந்திரனும் காசாக முறையே ரூபா 200000, ரூபா 150000 பற்றியிருந்தனர்.

(iv) பங்குடைமையின் சகல விற்பனைகளும், கொள்வனவுகளும் கடன் அடிப்படையில் மேற்கொள்ளப்படுகின்றது. இவ்வாண்டில் கடன்பட்டோரிடமிருந்து ரூபா 1800000 பெறப்பட்டுள்ளதுடன், கடன்கொடுத்தோருக்கு ரூபா 900000 செலுத்தப்பட்டுள்ளது.

(v) இவ்வாண்டில் செலுத்தப்பட்ட செயற்பாட்டுச் செலவுகள் ரூபா 350000 ஆகும்.

(vi) கடன்கள் மீதான வட்டி செலுத்தப்படுதல் வேண்டும்.

(vii) ஆதனம், பொறி மற்றும் உபகரணத்திற்கு கிரயத்தின் மீது நேர்கோட்டு முறையில் வருடாந்தம் 20% பெறுமானத்தேய்விடல் வேண்டும்.

(viii) 31.03.2013 இல் உள்ளபடியான பங்குடைமையின் நடைமுறைச் சொத்துக்களும் நடைமுறைப் பொறுப்புக்களும் பின்வருமாறு:

| | (ரூபா'000) |
|---|---|
| சரக்கிருப்பு | 275 |
| வியாபாரக் கடன்பட்டோர் | 500 |
| காசு | 260 |
| வியாபாரக் கடன்கொடுத்தோர் | 300 |

**வேண்டப்படுவது:**

மகேந்திரன், நரேந்திரன் பங்குடைமையின் பின்வரும் நிதிக் கூற்றுக்கள்.:

(1) 31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான வருமானக் கூற்று (பங்காளருக்கான பகிர்வுகள் உட்பட.)
(2) 31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான பங்காளரின் மூலதனம் மற்றும் நடைமுறைக் கணக்குகள்
(3) 31.03.2013 இல் உள்ளவாறான ராஜிதனின் கடன் கணக்கு

**(10 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

(ஆ) பின்வருவது உற்பத்திக் கம்பனியொன்றின் பூரணப்படுத்தப்படாத பாதீடு செய்யப்பட்ட மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை ஆகும்.

| மேந்தலைகள் | பகிர்தலுக்கான அடிப்படை | இயந்திரப் பகுதி (ரூ.'000) | முடிவுறுத்தும் பகுதி (ரூ.'000) | பராமரிப்பு பகுதி (ரூ.'000) | மொத்தம் (ரூ.'000) |
|---|---|---|---|---|---|
| ஒதுக்கப்பட்ட மேந்தலைகள் | | 820 | 480 | 190 | 1490 |
| மின்சாரம் | | | | | 240 |
| வாடகை | | | | | 180 |
| இயந்திரப் பெறுமானத்தேய்வு | | | | | 150 |
| ஊழியர் நலன்புரி செலவுகள் | | | | | 300 |

**மேலதிக தகவல்கள் :**

(i)

| விபரம் | இயந்திரப் பகுதி | முடிவுறுத்தும் பகுதி | பராமரிப்புப் பகுதி | மொத்தம் |
|---|---|---|---|---|
| கிலோவாற் மணித்தியாலங்கள் | 15 000 | 6 000 | 3 000 | 24 000 |
| இயந்திரத்தின் கிரயம் (ரூ.) | 1 000 000 | 500 000 | - | 1 500 000 |
| தளப்பரப்பு (சதுர மீற்றர்கள்) | 200 | 100 | 60 | 360 |
| ஊழியர் எண்ணிக்கை | 25 | 100 | 25 | 150 |

(ii) பராமரிப்புப் பகுதியானது தனது 60% சேவைகளை இயந்திரப் பகுதிக்கும் மிகுதியை முடிவுறுத்தும் பகுதிக்கும் வழங்குவதாக மதிப்பிடப்பட்டுள்ளது.

(iii) இயந்திரப் பகுதி, முடிவுறுத்தும் பகுதி என்பவற்றின் மேந்தலைகள் முறையே இயந்திர மணித்தியாலங்கள், நேர் ஊழிய மணித்தியாலங்களின் அடிப்படையில் உறிஞ்சப்படுகின்றது.

(iv) பின்வருவன கம்பனியால் உற்பத்தி செய்யப்பட்ட இரண்டு வகையான உற்பத்திப்பொருட்கள் தொடர்பானதாகும்.

| விபரம் | வகை A | வகை B |
|---|---|---|
| அலகொன்றிற்கான முதன்மைக் கிரயம் (ரூ.) | 700 | 720 |
| அலகொன்றிற்கு தேவைப்படும் மணித்தியாலங்கள் (பாதிடப்பட்டது) | | |
| - இயந்திர மணித்தியாலங்கள் | 5 | 6 |
| - நேர் ஊழிய மணித்தியாலங்கள் | 4 | 8 |
| உற்பத்தி அலகுகள் (பாதிடப்பட்டது) | 1 000 | 1 500 |

**வேண்டப்படுவது:**

(1) பூரணப்படுத்தப்பட்ட மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை (பராமரிப்புப் பகுதியின் மேந்தலைக் கிரயத்தின் மீள்பகிர்வு உட்பட)

(2) ஒவ்வொரு உற்பத்திப் பகுதிக்குமான மேந்தலை உறிஞ்சல் வீதம்

(3) A, B உற்பத்திப்பொருட்களின் அலகொன்றிற்கான உற்பத்திக் கிரயம்

*(10 புள்ளிகள்)*

*(மொத்தம் 20 புள்ளிகள்)*



Download Past Papers at : www.freebooks.lk

**வினா இல: 02 இற்கான உத்தேச விடைகளும் புள்ளித்திட்டமும்**

02. (அ) (1)

**மகேந்திரன், நரேந்திரன் பங்குடமை**
**31/03/2013ல் முடிவடைந்த ஆண்டிற்கான**
**வருமானக் கூற்று**

(ரூ'000)

| | | |
|---|---|---|
| விற்பனை | | 1 850 (02) → செய்கையை பார்க்குக |
| ஆரம்ப சரக்கிருப்பு | 200 | |
| கொள்வனவு | 1 000 (02) | (01) → செய்கையை பார்க்குக |
| | 1 200 | |
| இறுதிச் சரக்கிருப்பு | (275) | (925) |
| மொத்தலாபம் | | 925 |
| செலவுகள் | | |
| செயற்பாட்டு செலவுகள் | 350 | |
| ஆதனப் பொறி உபகரண தேய்வு | 200 (01) | |
| கடன்வட்டி (25 + 10) | 35 (02) | (585) |
| தேறிய லாபம் | | 340 |
| பங்காளர் சம்பளம் : மகேந்திரன் | 120 (01) | |
| நரேந்திரன் | 120 | |
| | | (240) |
| இலாபப் பகிர்வு : மகேந்திரன் | 50 | |
| நரேந்திரன் | 50 (01) | |
| பெற்ற பெறுமதிக்கு | | (100) |

**(06 புள்ளிகள்)**

**(10 புள்ளிகள்)**

**செய்கை :**

**கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு**

| | | | |
|---|---|---|---|
| மீதி | 450 | காசு | 1800 |
| விற்பனை | 1850 | | |
| | | மீ.செ | 500 |
| | 2300 | | 2300 |

(இரண்டு விடயங்களுக்கு 01 புள்ளி வீதம் 02 புள்ளிகள்)

**கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு**

| | | | |
|---|---|---|---|
| காசு | 900 | மீதி | 200 |
| | | கொள்வனவு | 1000 |
| மீ.செ | 300 | | |
| | 1200 | | 1200 |

(இரண்டு விடயங்களுக்கு 01 புள்ளி வீதம் 02 புள்ளிகள்)



Download Past Papers at : www.freebooks.lk

(2) **பங்காளர் மூலதனக் கணக்கு**

(ரூ'000)

| | மகேந்திரன் | நரேந்திரன் | ராஜிதன் | | மகேந்திரன் | நரேந்திரன் | ராஜிதன் |
|---|---|---|---|---|---|---|---|
| நன்மதிப்பு | 600 | 600 | - | மீதி/கீ/கொ/வ | 200 | 400 | 200 |
| ராஜிதன் கடன் | - (01) | - | 500 | நன்மதிப்பு | 600 | 360 (01) | 240 |
| மீதி/கீ/கொ/செ (01) | 200 | 160 | - | நடைமுறை கணக்கு | - | - | 60 |
| | 800 | 760 | 500 | | 800 | 760 | 500 |
| | | | | மீதி/கீ/கொ/வ | 200 | 160 | |

நன்மதிப்பின் தேறிய விளைவினை பதிவு செய்திருப்பின் முழுப்புள்ளியும் வழங்கப்படும்.

பங்காளர் நடைமுறைக் கணக்கு (ரூ'000)

| | மகேந்திரன் | நரேந்திரன் | ராஜிதன் | | மகேந்திரன் | நரேந்திரன் | ராஜிதன் |
|---|---|---|---|---|---|---|---|
| மூலதனம் | - | - | 60 | மீதி/கீ/கொ/வ | 150 | 100 | 60 |
| பற்றுக்கள் | 200 | 150 (01) | - | கடன்வட்டி (01) | - | 10 | - |
| | | | | பங்காளர் சம்பளம் (01) | 120 | 120 | - |
| மீதி/கீ/கொ/செ (01) | 120 | 130 | - | இலாபப்பகிர்வு (01) | 50 | 50 | - |
| | 320 | 280 | 60 | | 320 | 280 | 60 |
| பெற்ற பெறுமானம் | | | | மீதி/கீ/கொ/வ<br>பெற்ற பெறுமதிக்கு | 200 | 130 | - |

**(08 புள்ளிகள்)**

ராஜிதன் கடன் கணக்கு (ரூ'000)

| | | | |
|---|---|---|---|
| மீதி/கீ/கொ/செ | 500 | ராஜிதன் மூலதனக் க/கு | 500 (02) |
| | 500 | | 500 |
| | | மீதி/கீ/கொ/வ | 500 |

மாற்று முறை :

கடன் கணக்கு - ராஜிதன் (ரூ'000)

| | | | |
|---|---|---|---|
| மீதி/கீ/செ | 500 | மூலதனக் க/கு - ராஜிதன் | 440 (01) |
| | | நடைமுறைக் க/கு - ராஜிதன் | 60 (01) |
| | 500 | | 500 |
| | | மீதி/கீ/வ | 500 |

**(02 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

(ஆ) (1) மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை

(ரூ'000)

| மேந்தலைகள் | பகிர்வின் அடிப்படை | இயந்திர பகுதி | முடிவுறுத்தல் பகுதி | பராமரிப்புப் பகுதி | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| ஒதுக்கப்பட்ட மேந்தலைகள் | - | 820 | 480 | 190 | 1 490 |
| மின்சாரம் | கிலோவாட் மணி/ 5 : 2 : 1 (01) | 150 | 60 (01) | 30 | 240 |
| வாடகை | தளப்பரப்பு/ 10 : 5 : 3 (01) | 100 | 50 (01) | 30 | 180 |
| இயந்திர பெறுமானத்தேய்வு | இயந்திரத்தின் கிரயம்/ 2 : 1 (01) | 100 | 50 (01) | - | 150 |
| ஊழியர் நலன்புரிச் செலவுகள் | ஊழியர் எண்ணிக்கை/ 1 : 4 (01) | 50 | 200 (01) | 50 | 300 |
| | | 1 220 | 840 | 300 | 2 360 |
| பராமரிப்புப் பகுதி | சேவை வழங்கள்/ 3 : 2 | (01) 180 | (01) 120 | (300) | - |
| | | 1 400 | 960 | - | 2 360 |

பெறுமதியினை சரியாக பிரிப்பதற்கு புள்ளிகள் வழங்கப்படல் வேண்டும். **(10 புள்ளிகள்)**

(2) பொது மேந்தலைக்கிரய உறிஞ்சல் வீதம் :

இயந்திர திணைக்களம் = இயந்திர மணித்தியாலத்திற்கு ரூ. 100 (03)

செய்கை : (ரூ.)

பெற்ற பெறுமதிக்கு → (01) $\frac{1\,400\,000}{5\,000\ (01) + 9\,000\ (01)} = 100$

முடிவுறுத்தல் பகுதி நேர் ஊழிய மணித்தியாலத்திற்கு ரூ. 60 (03)

செய்கை : (ரூ.)

பெற்ற பெறுமதிக்கு → (01) $\frac{960\,000}{4\,000\ (01) + 12\,000\ (01)} = 60$

**(06 புள்ளிகள்)**

(3)

| | வகை A | வகை B |
|---|---|---|
| அலகொன்றிற்கான உற்பத்திக் கிரயம் | ரூ. 1 440 (02) | ரூ. 1 800 (02) |

| செய்கை : | வகை A (ரூ) | வகை B (ரூ) |
|---|---|---|
| முதன்மைக் கிரயம் | 700 | 720 |
| உறிஞ்சப்பட்ட மேந்தலைகள் : இயந்திரப் பகுதி | (01) 500 (5×100) | (01) 600 (6×100) |
| முடிவுறுத்தல் பகுதி | (01) 240 (4×60) | (01) 480 (8×60) |
| | 1 440 | 1 800 |

**(04 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**2 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகளின் அளவு 20 x 2 = 40 ஆகும்.
2ம் வினா கட்டாய வினாவாயினும் அதற்கு விண்ணப்பதாரிகளின் 98% மானோர் மாத்திரமே விடையளித்துள்ளனர்.
அதில் 00 - 10 புள்ளி ஆயிடையில் 28% ம்,
11 - 20 புள்ளி ஆயிடையில் 22% ம்,
21 - 30 புள்ளி ஆயிடையில் 26% ம்,
31 - 40 புள்ளி ஆயிடையில் 24% ம்,
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். அதற்கேற்ப 31 புள்ளிகளை விடக் கூடுதலான புள்ளிகளைப் பெற்றவர்கள் விண்ணப்பதாரிகளில் 24% மாக இருந்ததுடன், விண்ணப்பதாரிகளின் 28% மானோர் 10 புள்ளிகளை விடவும் குறைவாகவே பெற்றுள்ளனர்.




உபபிரிவுகள் 06 இனைக் கொண்டுள்ள இவ்வினாவில் அந்த உபபகுதிகளின் 6 இனதும் இலகுதன்மை 35% த்தை விடக் கூடுதலானதாகும். இலகுதன்மை கூடுதலான உபபகுதி (ஆ) (1) ஆகும். அதன் இலகுதன்மை 77% மாகும். இலகுதன்மை குறைவான உபபிரிவு (ஆ) (3) ஆகும். அதன் இலகுதன்மை 35% மாகும்.

2வது வினாவின் (அ) (1) பகுதியின் இலகுதன்மை 62% மாகும். கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக்கணக்கு, கடன் கொடுநர் கட்டுப்பாட்டுக் கணக்கு என்பவற்றினூடாக நிதியாண்டுக்கான கொள்வனவுகள், விற்பனைகளைக் கணிப்பிட முடியாமை, பங்காளரான நரேந்திரன் வணிகத்திற்கு வழங்கியிருந்த கடனுக்கான 5% வட்டியினை சீராக்காமை போன்ற பலவீனங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

(அ) (2) பகுதியின் இலகுதன்மை 60% மாகும். நன்மதிப்பினை மூலதனக் கணக்குகளில் சரியாக சீராக்காமை, நடைமுறைக் கணக்கினுள் பங்காளரான நரேந்திரனின் கடன் வட்டி பதியப்படாமை போன்ற பொதுவான தவறுகள் விண்ணப்பதாரிகளினால் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

(அ) (3) வது பகுதியின் இலகுதன்மை 41% மாகும். ஓய்வு பெறும் பங்காளரின் உரிமையானது, கடன் கணக்கில் சரியாகக் கணிக்கப்படாமை இங்கு பலவீனமான மட்டத்தில் காணப்படுகிறது.

பங்குடமையொன்றின் வருமானக் கூற்று, பெற்ற இலாபத்தை பகிர்தல், நன்மதிப்பை மூலதனக் கணக்கில் சீராக்கல், ஓய்வு பெறும் பங்காளரின் உரிமையினை கடன் கணக்கினுள் சீராக்குதல் போன்ற விடயங்களை மாணவர்கள் விளங்கிக் கொள்ளும் முறையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடானது ஒழுங்கமைக்கப்படல் முக்கியமானதாகும்.




Download Past Papers at : www.freebooks.lk

(ஆ) (1) பகுதியின் இலகுதன்மை 77% மாகும். பொது மேந்தலைக் கிரயத்தினை சரியான அடிப்படையில் கிரய நிலையங்களுக்கு பகிர்வு செய்தல் தொடர்பிலான விளக்கம் சில மாணவர்களிடம் காணப்படவில்லை.

(2) பகுதியின் இலகுதன்மை 44% மாகும். உற்பத்திப்பகுதிகளின் பொது மேந்தலைக் கிரயத்தின் உறிஞ்சல் வீதத்தை கணிப்பிடும் அறிவு பலவீனமான மட்டத்தில் காணப்படுகிறது.

(3) பகுதியின் இலகுதன்மை 35% மாகும். A, B பொருட்களின் அலகொன்றிற்கான உற்பத்திக் கிரயக் கணிப்பீட்டின்போது பொது மேந்தலைக் கிரயத்தின் உறிஞ்சல் வீதத்தினை கணிப்பிடாமை, கணிப்பிடப்பட்ட உறிஞ்சல் வீதத்தினை சரியாக மணித்தியாலங்களின் அளவுக்கேற்ப முதன்மைக் கிரயத்தில் சேர்க்காமை போன்ற பலவீனங்களை இங்கு காணக்கூடியதாக இருந்தது.

பொருளொன்றின் அலகொன்றிற்கான உற்பத்திக் கிரயத்திற்கு முதன்மைக் கிரயம் பொது மேந்தலைக் கிரயம் போன்ற இரு பகுதிகளும் சேர்க்கப்பட வேண்டும் என்பதனால் அதற்காக பொது மேந்தலைக் கிரயமானது மத்திய நிலையங்களுக்கிடையில் சரியாகப் பகிர்தல், மீளப்பகிர்வு செய்தல், உறிஞ்சல் வீதத்தினை உருவாக்குதல்,வீதங்களின் அடிப்படையில் உறிஞ்சுதல் என்பவற்றை உறுதிப்படுத்தும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் வேண்டும்.



Download Past Papers at : www.freebooks.lk

## வினா இலக்கம் - 03

3. சுஜீவன் என்பவர் 01.01.2013 இல் வியாபார நிறுவனமொன்றை ஆரம்பித்தார். 2013 ஜனவரி மாதத்திற்கான நிறுவனத்தின் கொடுக்கல்வாங்கல்கள் பின்வருமாறு.

| இல. | திகதி | கொடுக்கல்வாங்கல் |
|---|---|---|
| (i) | 01.01.2013 | சுஜீவன் தனது வியாபாரத்தில் ரூபா 400000 காசையும் ரூபா 840000 பெறுமதியான வாகனம் ஒன்றையும் முதலீடு செய்தார். |
| (ii) | 01.01.2013 | ரூபா 240000 பெறுமதியான தளபாடம், பொருத்துக்கள் கொள்வனவு செய்யப்பட்டது. |
| (iii) | 08.01.2013 | ரூபா 100000 பெறுமதியான சரக்குகள் கொள்வனவு செய்யப்பட்டதுடன் அதன் முழுத் தொகைக்கும் காசோலை வழங்கப்பட்டது. |
| (iv) | 12.01.2013 | ரூபா 80000 கிரயமான சரக்குகள் ரூபா 130000 இற்கு விற்பனை செய்யப்பட்டதுடன் இத்தொகைக்காக காசோலையொன்று பெற்றுக் கொள்ளப்பட்டது. |
| (v) | 15.01.2013 | ரூபா 150000 பெறுமதியான சரக்குகள் கடனுக்கு கொள்வனவு செய்யப்பட்டது. |
| (vi) | 20.01.2013 | ரூபா 140000 கிரயமான சரக்குகள் ரூபா 200000 இற்கு கடனுக்கு விற்பனை செய்யப்பட்டது. |
| (vii) | 23.01.2013 | கடன்கொடுத்தோருக்குச் செலுத்த வேண்டிய தொகையின் ஒரு பகுதியைத் தீர்ப்பதற்காக ரூபா 90000 காசோலை வழங்கப்பட்டதுடன் ரூபா 5000 கழிவாகப் பெறப்பட்டது. |
| (viii) | 25.01.2013 | செலுத்தப்பட்ட செயற்பாட்டுச் செலவுகள் ரூபா 90000. |
| (ix) | 26.01.2013 | கடன்பட்டோரிடமிருந்து ரூபா 150000 பெறப்பட்டு அது வங்கியில் வைப்புச் செய்யப்பட்டது. |

**மேலதிக தகவல்கள்:**

(i) நிறுவனத்தின் சகல காசுக் கொடுக்கல்வாங்கல்களும் வங்கிக் கணக்கொன்றின் ஊடாக மேற்கொள்ளப்படுகின்றது.

(ii) பின்வரும் காரணங்களினால் 31.01.2013 இல் உள்ளபடியான நிறுவனத்தின் வங்கிக் கூற்று மீதியானது அத்தினத்திலுள்ள காசுப் புத்தக மீதியுடன் இணங்கவில்லை.

(அ) கடன்பட்டோர் ஒருவரால் நேரடியாகவே வங்கியில் வைப்புச் செய்யப்பட்ட ரூபா 30000 காசோலையொன்று காசுப் புத்தகத்தில் பதிவு செய்யப்படவில்லை.

(ஆ) வங்கிக் கட்டணங்கள் ரூபா 2000 காசுப் புத்தகத்தில் பதிவு செய்யப்படவில்லை.

(இ) கடன்கொடுத்தோருக்கு வழங்கப்பட்ட காசோலைகளுள் ரூபா 20000 காசோலையொன்று இன்னமும் கொடுப்பனவிற்காகச் சமர்ப்பிக்கப்படவில்லை.

(iii) ஆதனம், பொறி உபகரணங்களுக்கு கிரயத்தின் மீது நேர்கோட்டு முறையில் வருடாந்தம் 10% பெறுமானத்தேய்விடல் வேண்டும்.

(iv) மாத இறுதியிலுள்ள கடன்பட்டோர் மீதியின் மீது 10% ஐயக்கடன் ஏற்பாடு செய்தல் வேண்டும்.

**வேண்டப்படுவது:**

(1) கணக்கீட்டுச் சமன்பாட்டைப் பயன்படுத்தி (i) தொடக்கம் (ix) வரையிலான மேலுள்ள கொடுக்கல் வாங்கல்கள் ஏற்படுத்தும் தாக்கத்தைக் (பெறுமதிகளுடன்) காட்டுவதுடன் ஒவ்வொரு பெறுமதிகளும் அதிகரிக்கின்றதா (+) குறைவடைகின்றதா (–) என்பதனையும் அப்பெறுமதியின் முன்னால் குறிப்பிடுக (பின்வரும் வடிவத்தை பயன்படுத்தவும்)

| கொடுக்கல் | சொத்துக்கள் | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வாங்கல் இலக்கம் | மோட்டார் வாகனம் | தளபாடம் பொருத்துக்கள் | சரக்கிருப்பு | கடன்பட்டோர் | வங்கி | பொறுப்புக்கள் | உரிமையாண்மை |
| | | | | | | | |
| | | | | | | | |

(2) மேலுள்ள வங்கி நிரலிலுள்ள மீதியைப் பயன்படுத்தி 31.01.2013 இல் உள்ளபடியான வங்கிக் கூற்று மீதியையும் சீராக்கிய காசுப் புத்தக மீதியையும் கணிப்பிடுக.

(3) 31.01.2013 இல் முடிவடைந்த மாதத்திற்கான சுஜீவன் நிறுவனத்தின் வருமானக் கூற்று.

*(15 புள்ளிகள்)*



Download Past Papers at : www.freebooks.lk

**வினா இல 03 இற்கான உத்தேச விடைகளும் புள்ளித்திட்டமும்**

**(3)** **(1)**

(ரூ'000)

| | சொத்துக்கள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | மோட்டார் வாகனம் | தளபாடப் பொருத்துக்கள் | சரக்கிருப்பு | கடன்பட்டோர் | வங்கி | பொறுப்புக்கள் | உரிமையாண்மை | |
| (i) | + 840 | | | | + 400 | | + 1 240 | 02 |
| (ii) | | + 240 | | | - 240 | | | 01 |
| (iii) | | | + 100 | | - 100 | | | 01 |
| (iv) | | | - 80 | | +130 | | + 50 | 02 |
| (v) | | | + 150 | | | + 150 | | 01 |
| (vi) | | | - 140 | + 200 | | | + 60 | 02 |
| (vii) | | | | | - 90 | - 95 | + 05 | 02 |
| (viii) | | | | | - 90 | | - 90 | 01 |
| (ix) | | | | - 150 | + 150 | | | 01 |
| | 840 | 240 | 30 | 50 | 160 | 55 | 1 265 | |

**(13 புள்ளிகள்)**

(2) 31/01/2013 இல் உள்ளபடியான வங்கிக்கூற்று மீதி - ரூ. 208 000 (02)

செய்கை

வங்கிக் கூற்று மீதி

| | | ரூ'000 | |
|---|---|---|---|
| சீராக்கிய காசேட்டுமீதி | | (01) 188 | |
| + : | | | |
| மாற்றப்படாத காசோலை | | 20 | (01) |
| 2013.01.31 அன்று வங்கிக் கூற்று மீதி | | 208 | |

(3) சீராக்கிய காசுப் புத்தக மீதி - ரூ. 188 000 (03) ← செய்கையைப் பார்க்குக.

செய்கை

சீராக்கிய காசேடு

| | | | | ரூ'000 |
|---|---|---|---|---|
| மீதி (01) | 160 | | வங்கிக் கட்டணம் | 2 (01) |
| கடன்பட்டோர் | 30 (01) | | மீதி/கீ/கொ/செ | 188 |
| | 190 | | | 190 |
| மீதி/கீ/கொ/வ | 188 | | | |

**(05 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

(3) சுஜிவன் நிறுவனம்

31/1/2013 இல் முடிவடைந்த மாதத்திற்கான வருமானக் கூற்று

(ரூ'000)

| | | |
|---|---|---|
| விற்பனை (130+200) | | 330 (02) |
| விற்பனைக் கிரயம் | | |
| கொள்வனவு (100+150) | 250 | |
| இறுதிச் சரக்கிருப்பு | (30) | (220) (02) |
| மொத்தலாபம் | | 110 |
| வேறு வருமானங்கள் | | |
| பெற்ற கழிவு | | 5 (01) |
| | | 115 |
| செலவினங்கள் | | |
| தளபாட பெறுமானத்தேய்வு | 2 (01) | |
| ஆதனம் பொறி உபகரணப் பெறுமானத் தேய்வு | 7 (01) | |
| ஐயக்கடன் | 2 (02) | |
| செயற்பாட்டு செலவுகள் | 90 (01) | |
| வங்கிக் கட்டணம் | 2 (01) | (103) |
| தேறியலாபம் | | (01) 12 |

**(12 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**3 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகளின் அளவு 15 x 2 = 30 ஆகும்.
3 வது வினாவினை விண்ணப்பதாரிகளின் 91% மானோர் மாத்திரமே தெரிவு செய்துள்ளனர்.
அதில் 00 - 07 புள்ளி ஆயிடையில் 17% ம்,
08 - 15 புள்ளி ஆயிடையில் 25% ம்,
16 - 23 புள்ளி ஆயிடையில் 31% ம்,
24 - 30 புள்ளி ஆயிடையில் 27% ம்,
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இவ்வினாவிற்கு 24 அல்லது அதற்கும் கூடுதலாக பெற்றவர்கள் 27% என்பதுடன், 07 அல்லது அதனை விடக் குறைவாகப் புள்ளிகளைப் பெற்றவர்கள் 17% ம் ஆகும்.




இவ்வினாவிற்குரிய உபபகுதிகள் 3 இலும் இலகுதன்மை கூடுதலான பகுதி (1) என்பதுடன், அதன் இலகுதன்மை 77% ஆகும். அதேபோன்று இலகுதன்மை குறைவான உபபகுதி (3) என்பதுடன், அதன் இலகுதன்மை 44% ஆகும்.

பகுதி 3 (1) இன் இலகுதன்மை 77% மாகும். கடன் கொடுத்தோருக்கு காசு கொடுக்கும்போது கிடைக்கும் கழிவானது பொறுப்பில் ஏற்படும் குறைவொன்றென்பதனை சில விண்ணப்பதாரிகள் இனம்கண்டிருக்கவில்லை.

பகுதி (2) இன் இலகுதன்மை 73% மாகும். மேலதிகத் தகவல்களைப் பயன்படுத்தி வங்கி மீதியினை சீராக்குவதற்கு விண்ணப்பதாரிகளால் முடியாதிருந்தது.

பகுதி (3) இன் இலகுதன்மை 44% மாகும். கணக்கீட்டு சமன்பாட்டினையும் மேலதிகத் தகவல்களையும் பயன்படுத்தி வருமானக் கூற்றினைச் சரியாகத் தயாரிப்பதற்கு பெரும்பாலான மாணவர்களுக்கு முடியாதிருந்தது.

சீராக்கலுக்கான பதிவுகளுடன் கணக்கீட்டுச் சமன்பாட்டினைத் தயாரித்தல், சமன்பாட்டுத் தரவுகளின் உதவியுடன் வருமானக் கூற்றினைத் தயாரித்தல் போன்ற விடயங்கள் சரியாக விளங்கும் வகையில் பயிற்சிகளை மேற்கொள்வதற்கு ஏற்றவாறு கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகள் ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.



Download Past Papers at : www.freebooks.lk

## வினா இலக்கம் - 04

**4.(அ)** றொசான் தனது ஆடம்பர மோட்டார் வாகனத்தைப் பயன்படுத்தி திருமணங்களுக்கு மோட்டார் வாகனத்தை வாடகைக்கு அமர்த்தும் வியாபாரமொன்றை ஆரம்பிக்கத் திட்டமிடுகின்றார். பின்வருவன மோட்டார் வாகனம் தொடர்பில் மதிப்பீடு செய்யப்பட்ட செலவுகள் ஆகும்.

| | |
|---|---|
| வருடமொன்றுக்கான காப்புறுதிக் கட்டணம் | - ரூபா 58000 |
| வருடமொன்றுக்கான புதுப்பித்தல் அனுமதிக் கட்டணம் | - ரூபா 8000 |
| மாதமொன்றிற்கான திருத்தங்கள் மற்றும் பராமரிப்புச் செலவுகள் | - ரூபா 5000 |
| வருடாந்தப் பெறுமானத்தேய்வு | - ரூபா 500000 |
| சராதி சம்பளம் | - மாதாந்தம் ரூபா 9000 அத்துடன் வாடகை வருமானத்தின் 10% |
| எரிபொருள் கிரயம் | - கிலோ மீற்றர் ஒன்றிற்கு ரூபா 20 |
| பின்வரும் மதிப்பீடுகளும் செய்யப்பட்டுள்ளது: | |
| வருடாந்த நிர்வாகச் செலவுகள் | - ரூபா 50 000 |
| மோட்டார் வாகன வாடகை வருமானம் | - கிலோ மீற்றர் ஒன்றிற்கு ரூபா 100 |

**வேண்டப்படுவது:**

(1) வருடாந்தக் கிரயத்தை ஈடுசெய்வதற்கு மோட்டார் வாகனம் ஓட வேண்டிய கிலோ மீற்றர்களின் எண்ணிக்கை

(2) வருடாந்த இலாபமாக ரூபா 350 000 எதிர்பார்க்கப்படுமாயின் மோட்டார் வாகனம் ஓட வேண்டிய கிலோ மீற்றர்களின் எண்ணிக்கை

*(05 புள்ளிகள்)*

**(ஆ)** உதயதாரகை விளையாட்டுக் கழகமானது தனது அங்கத்தவர்களுக்காக உள்ளக விளையாட்டு அரங்கையும் நீச்சல் தடாகத்தையும் பேணி வருகின்றது. 31.03.2013, 31.03.2012 இல் உள்ளபடியான அதன் சொத்துக்களும் பொறுப்புக்களும் பின்வருமாறு:

| | **31.03.2013 இல் உள்ளபடி (ரூ. '000)** | **31.03.2012 இல் உள்ளபடி (ரூ. '000)** |
|---|---|---|
| கட்டடம் (முன்கொண்டு செல்தொகையில்) | 2000 | 2400 |
| நீச்சல் தடாகம் (முன்கொண்டு செல்தொகையில்) | 3750 | 4000 |
| முற்பணமாகப் பெற்ற நீச்சல் தடாக வாடகை வருமானம் | 50 | 60 |
| வருமதி சந்தா | 90 | 80 |
| நிலையான வைப்பு | 1200 | - |
| காசு | ? | 100 |

பின்வரும் தகவல்கள் 31.03.2013 இல் முடிவடைந்த வருடத்துடன் தொடர்புடையனவாகும்.

(i) பின்வரும் சகல செலவுகளும் காசாகச் செலுத்தப்பட்டவையாகும்.

| | **ரூ. '000** |
|---|---|
| நீச்சல் தடாகக் காப்பாளருக்கான வருடாந்த சம்பளம் | 300 |
| ஏனைய ஊழியர்களுக்கான வருடாந்த சம்பளங்கள் | 1 200 |
| ஏனைய செலவுகள் | 300 |

(ii) நீச்சல் தடாகமானது வெளியிலுள்ள நிறுவனங்களுக்கும் வாடகைக்கு விடப்படுகின்றது. இவ்வாண்டில் வாடகைக்கு விடப்பட்ட நாட்களின் எண்ணிக்கைகளும் அறவிடப்பட்ட கட்டணங்களும் பின்வருவனவாகும்.

| **கட்டணம் (ரூ.)** | **வாடகைக்கு விடப்பட்ட நாட்களின் எண்ணிக்கை** |
|---|---|
| ஒரு நாளுக்கு ரூ. 50000 | 30 |
| அரை நாளுக்கு ரூ. 25000 | 20 |



Download Past Papers at : www.freebooks.lk

(iii) அங்கத்தவர் ஒருவருக்கான மாத சந்தா ரூபா 1 000 ஆகும். 01.04.2012 இல் 100 அங்கத்தவர்கள் காணப்பட்டதுடன் அன்றைய தினம் 10 புதிய அங்கத்தவர்கள் இணைந்து கொண்டனர். இப்புதிய அங்கத்தவர்கள் முழு ஆண்டுக்குமான சந்தாவைச் செலுத்தினர். ஆரம்பத்தில் இருந்த 15 அங்கத்தவர்கள் 30.09.2012 இல் விலகினர். விலகிய சகல அங்கத்தவர்களும் அத்திகதி வரையான தமது சகல நிலுவைகளையும் செலுத்தியிருந்தனர். 31.03.2012 இல் நிலுவையாகக் காணப்பட்ட முழுச் சந்தாவும் நடைமுறை ஆண்டில் பெற்றுக் கொள்ளப்பட்டது.

(iv) விளையாட்டுக் கழகத்தின் சிற்றுண்டிச்சாலையானது வெளிநிறுவனமொன்றினால் முகாமை செய்யப்படுவதுடன், அதன் வருமானத்தின் 20% விளையாட்டுக் கழகத்துக்கு செலுத்தப்படல் வேண்டும். இவ்வாண்டிற்கான சிற்றுண்டிச்சாலை வருமானம் ரூபா 300 000 ஆக இருந்ததுடன் அதிலிருந்து விளையாட்டுக்கழகத்துக்கு வரவேண்டிய தொகை பெறப்பட்டது.

(v) வருடாந்தம் 10% வட்டி வீதத்தில் ஒரு வருடத்தைக் கொண்ட நிலையான வைப்புக் கணக்கானது 01.12.2012 இல் ஆரம்பிக்கப்பட்டது.

(vi) இவ்வாண்டில் ஆதனம், பொறி, உபகரணங்கள் தொடர்பில் எதுவித கொள்வனவுகளும் அகற்றல்களும் நடைபெறவில்லை.

**வேண்டப்படுவது:**

(1) 31.03.2013 இல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானச் செலவு கணக்கு

(2) 31.03.2013 இல் உள்ளபடியான திரண்டநிதி மற்றும் காசு மீதி

*(10 புள்ளிகள்)*
*(மொத்தம் 15 புள்ளிகள்)*

**வினா இல. 04 இற்கான உத்தேச விடைகளும் புள்ளித்திட்டமும்**

04) (அ) (1) கி.மீ. 11 200 (07)

செய்கை:

சமப்பாட்டுப் புள்ளி (கி.மீ.) = 784 000 (04) / 70 (03) → செய்கை:

= கி.மீ. 11 200

| | ரூ. |
|---|---|
| காப்புறுதிக் கட்டணம் | 58 000 |
| புதுப்பித்தல் அனுமதிக்கட்டணம் | 8 000 |
| திருத்தங்கள் / பராமரிப்பும் செலவுகள் | 60 000 |
| பெறுமானத்தேய்வு | 500 000 |
| நிர்வாகச் செலவுகள் | 50 000 |
| சாரதி சம்பளம் | 108 000 |
| மொத்த நிலையான கிரயம் | 784 000 |

(03)

மாறும்கிரயம் :

| | ரூ. | |
|---|---|---|
| சாரதி சம்பளம் | 10 | 01 |
| எரிபொருள் | 20 | 01 |
| | 30 | 01 |

அலகிற்கான பங்களிப்பு (ரூ.) = 100 - 30
= 70

(07 புள்ளிகள்)



Download Past Papers at : www.freebooks.lk

(2) கி.மீ. 16 200 (03)

செய்கை:

$$\frac{784\,000 + 350\,000}{70} = \text{கி.மீ.} 16\,200$$

(01) (01) (01)

**(03 புள்ளிகள்)**

(ஆ)(1)

**உதயதாரகை விளையாட்டுக் கழகம்**

**31/3/2013 இல் முடிவடைந்த வருடத்திற்கான**

**வருமானம் செலவுக் கணக்கு**

(ரூ'000)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நீச்சல் தடாக காப்பாளர் சம்பளம் | 300 | (01) | நீச்சல் தடாக வருமானம் | 2 000 | (01) |
| ஏனைய ஊழியர் சம்பளம் | 1 200 | | சிற்றுண்டிச்சாலை வருமானம் | 60 | (01) |
| ஏனைய செலவுகள் | 300 | | நிலையான வைப்புவட்டி | 40 | (01) |
| கட்டிட பெறுமானத்தேய்வு | 400 | (01) | அங்கத்துவ சந்தா | 1 230 | (03) ← செய்கையை பார்க்குக. |
| நீச்சல் தடாக பெறுமானத்தேய்வு | 250 | (01) | | | |
| செலவிலும் கூடிய வருமானம் (01) பெற்ற பெறுமதிக்கு | 880 | | | | |
| | 3 330 | | | 3 330 | |

**(11 புள்ளிகள்)**

செய்கை:

| அங்கத்துவ சந்தா | | ரூ'000 | |
|---|---|---|---|
| 10 x 12 | = | 120 | (01) |
| 15 x 6 | = | 90 | (01) |
| 85 x 12 | = | 1 020 | (01) |
| | | 1 230 | |
| **நீச்சல் தடாக வருமானம்** | | ரூ'000 | |
| 30 x 50 | = | 1 500 | (01) |
| 20 x 25 | = | 500 | |
| | | 2 000 | |

(2) காசு மீதி ரூ. 370 000 (07)



Download Past Papers at : www.freebooks.lk

செய்கை : (ரூ'000)

**கொள்ளல் கொடுத்தல் கணக்கு**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மீதி கீ/கொ/வ | 100 | | நீச்சல் தடாக காப்பாளர் சம்பளம் | 300 | |
| அங்கத்துவ சந்தா | 1 220 | (02) | ஏனைய ஊழியர் சம்பளம் | 1 200 | |
| நீச்சல் தடாக வருமானம் | 1 990 | (02) | ஏனைய செலவுகள் | 300 | |
| சிற்றுண்டிச் சாலை வருமானம் | 60 | (01) | நிலையான வைப்பு | 1 200 | (01) |
| | | | மீ/கீ/கொ/செ | 370 | |
| | 3 370 | | | 3 370 | |

**அங்கத்துவ சந்தாக் கணக்கு**

| | | | |
|---|---|---|---|
| நிலுவை | 80 | காசு | 1 220 |
| வருமான செலவு | 1 230 | நிலுவை மீ.செ | 90 |
| | 1 310 | | 1 310 |

(இரண்டு உருப்படிகளுக்கு 01 புள்ளி வீதம் மொத்தமாக 02 புள்ளிகள்.)

**முற்பணதடாக வருமானக் கணக்கு**

| | | | |
|---|---|---|---|
| வருமான செலவுக் க.கு | 2000 | மீதி | 60 |
| மீ/கீ/கொ/செ | 50 | காசு | 1990 |
| | 2050 | | 2050 |

(இரண்டு உருப்படிகளுக்கு 01 புள்ளி வீதம் மொத்தமாக 02 புள்ளிகள்.)

31/3/2013 இல் உள்ளபடியான திரண்ட நிதி ரூ. 7400000 (03)

| செய்கை : | (ரூ.'000) | | மாற்று முறை : | (ரூ.'000) |
|---|---|---|---|---|
| கட்டடம் | 2 400 | (02) | கட்டடம் | 2 000 |
| நீச்சல் தடாகம் | 4 000 | | நீச்சல் தடாகம் | 3 750 |
| கிடைக்கவேண்டிய அங்கத்துவ சந்தா | 80 | | கிடைக்கவேண்டிய அங்கத்துவ சந்தா | 90 |
| காசு | 100 | | நிலையான வைப்பு | 1 200 |
| முற்பண நீச்சல் தடாக வாடகை | (60) | | காசு | 370 |
| 2012.03.31 ல் திரண்ட நிதி | 6 520 | | கிடைக்கவேண்டிய வட்டி | 40 |
| வருடத்திற்கான காசு மிகை | 880 | (01) | முற்பண நீச்சல் தடாக வாடகை | (50) |
| 2013.03.31 ல் திரண்ட நிதி | 7 400 | | 2013.03.31 ல் திரண்ட நிதி | 7 400 |
| | | | (எந்தவொரு உருப்படிகள் இரண்டிற்கும் 1 புள்ளிவீதம் (03) புள்ளிகள்) | |

**(09 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**4 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகளின் அளவு 15 x 2 = 30 ஆகும்.
4 வது வினாவினை விண்ணப்பதாரிகளின் 62% மானோரே தெரிவு செய்துள்ளனர்.
அதில் 00 - 07 புள்ளி ஆயிடையில் 52% ம்,
08 - 15 புள்ளி ஆயிடையில் 29% ம்,
16 - 23 புள்ளி ஆயிடையில் 13% ம்,
24 - 30 புள்ளி ஆயிடையில் 6% ம்,
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இதற்கேற்ப இவ்வினாவிற்கு 24 புள்ளிகள் அல்லது அதற்கும் கூடுதலான புள்ளிகளை 6% மானோர் மாத்திரமே பெற்றுள்ளதுடன், விண்ணப்பதாரிகளில் 52% மானோர் 07 அல்லது அதனிலும் குறைந்த புள்ளிகளையே பெற்றுள்ளனர்.




இவ்வினாவிற்குரிய 4 உபபகுதிகளின் இரு உபபகுதிகளுக்கான இலகுதன்மை 40% த்தை விடக் கூடுதலானதாகும். இலகுதன்மை குறைவான உபபகுதி (ஆ) (2) ஆக இருப்பதுடன், அதன் இலகுதன்மை 28% மாகும். இலகுதன்மை கூடுதலான உபபகுதி (அ) (2) ஆகும். அதன் இலகுதன்மை 50% மாகும்.

(4) (அ) (1) பகுதியின் இலகுதன்மை 42% மாகும். நிலையான மாறும் கிரயங்களை தெளிவாக இனம்காண்பதில் பெரும்பாலான மாணவர்கள் சிரமத்தை எதிர்நோக்கியிருந்தனர். (அ) (2) பகுதியின் இலகுதன்மை 50% மாகும். எதிர்பார்ப்பு இலாபத்தை அடைந்து கொள்வதற்கு ஓடவேண்டிய கிலோ மீற்றர்களின் எண்ணிக்கையினைக் கணிப்பதற்கு சில மாணவர்களினால் முடியாமல் போயிருந்தது. (ஆ) (1) பகுதியின் இலகுதன்மை 34% மாகும். அங்கத்துவச் சந்தாவினைச் சரியாகக் கணிப்பிட முடியாதிருந்தமை. நீச்சல் தடாக வருமானத்தை சரியாகக் கணிப்பிட முடியாதிருந்தமை என்பன இங்கு இலகுதன்மை குறைவதற்கான காரணங்களாக இருந்திருக்கலாம். (ஆ) (2) பகுதியின் இலகுதன்மை 28% மாகும். முற்பணமாகப் பெற்ற நீச்சல் தடாக வாடகையினை பொறுப்பொன்றாக இனம் காணாமையும், நிதியாண்டு முடிவில் திரண்ட நிதியினைக் கணிப்பதற்கு வருடத்தின் மிகையினையும், கூட்டவேண்டும் என்பதை விண்ணப்பதாரிகள் விளங்கியிருக்காமையும் இப்பகுதியின் இலகுதன்மை குறைவாக இருப்பதற்கு காரணமாக இருக்கலாம்.

வருட முடிவிலுள்ள திரண்டநிதியினைக் கணிப்பிடுவதற்கு வருடத்தின் மிகையினைக் கூட்ட வேண்டும் என்பதை விளங்கியிருக்காமை, வருட முடிவிலுள்ள காசு மீதியினை கண்டு பிடிப்பதற்கு கொள்ளல் கொடுத்தல் கணக்கினைச் சரியாகத் தயாரிக்காமை, அதன் போது நீச்சல் தடாகத்திற்கு காசாக கிடைக்கப் பெற்ற வருமானத்தையும், அங்கத்தவர்களிடமிருந்து காசாகக் கிடைக்கப் பெற்ற வருமானத்தையும் சரியாகக் கணிக்காமை இவ்வினாவிற்கான இலகுதன்மை குறைந்த மட்டத்தில் காணப்படுவதற்கான காரணங்களாகும். நிலையான, மாறும் கிரயங்களை இனம் காணக் கூடியவாறான செயற்பாட்டு ரீதியான சந்தர்ப்பங்களைப் பெற்றுக் கொடுப்பதற்கு ஏற்றவாறு கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகள் ஒழுங்கமைக்கப்படல் வேண்டும். இலாப நோக்கற்ற அமைப்புகளில் காணப்படுகின்ற வெளியகச் செயற்பாடுகளை உதாரணங்களாகப் பயன்படுத்தி வருடத்தினுள் பெற்ற காசின் அளவு, வருடத்திற்குரிய வருமானங்களின் அளவு என்பவைகளை தெளிவு படுத்தக்கூடியவாறு கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகள் ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.



Download Past Papers at : www.freebooks.lk

## வினா இலக்கம் - 05

**5. (அ)** வரையறுத்த சொலமன் பொதுக்கம்பனியின் 2013 மார்ச், பெப்ரவரி மாதங்களுக்கான சம்பளப் பட்டியலில் இருந்து பிரித்தெடுக்கப்பட்ட தகவல்கள் பின்வருமாறு:

| | மார்ச் 2013 (ரூ. '000) | பெப்ரவரி 2013 (ரூ. '000) |
|---|---|---|
| அடிப்படைச் சம்பளம் | 8000 | 7000 |
| மேலதிக நேரக் கொடுப்பனவு | 500 | 400 |
| ஊழியர் சேமலாப நிதியப் (EPF) பங்களிப்பு: | | |
| ஊழியர்கள் (10%) | 800 | 700 |
| தொழில் வழங்குனர் (15%) | 1200 | 1050 |
| ஊழியர் நம்பிக்கை நிதியப் (ETF) பங்களிப்பு (3%) | 240 | 210 |
| கழிப்பனவுகள்: | | |
| தொழிற்சங்க அங்கத்துவக் கட்டணம் | 250 | 150 |
| ஊழியர் கடன் அறவீடு | 450 | 200 |

**மேலதிக தகவல்கள் :**

(i) ஒவ்வொரு மாதச் சம்பளமும் தொடர்ந்து வரும் மாதத்தின் 10 ஆம் நாள் வழங்கப்படுகின்றது.

(ii) ஒவ்வொரு மாதத்துக்குமான ஊழியர் சேமலாப நிதி மற்றும் ஊழியருக்கான நம்பிக்கை நிதி பங்களிப்புக்கள் தொடர்ந்து வரும் மாதத்தின் 15 ஆம் நாள் அனுப்பப்படுகின்றது.

**வேண்டப்படுவது:**

(1) கம்பனியின் மார்ச் 2013 மாதத்திற்கான ஊழியர் தொடர்பான செலவுகள் (ஒவ்வொரு உருப்படிகளையும் தனித்தனியாகக் குறிப்பிடுக.)

(2) 2013 மார்ச் மாதத்திற்கான கம்பனியின் சம்பளக் கட்டுப்பாட்டுக் கணக்கு, சம்பளச் சென்மதி கணக்கு, ஊழியர் சேமலாப நிதி சென்மதி கணக்கு (ஆரம்ப மீதிகள் உள்ளடங்கலாக).

*(05 புள்ளிகள்)*

**(ஆ)** வரையறுத்த மதுரா பொதுக்கம்பனியினதும், வரையத்த சுமிதா பொதுக்கம்பனியினதும் 31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான வருமானக் கூற்றுக்களின் சுருக்கங்கள் கீழே தரப்படுகின்றது.

| | வரையறுத்த மதுரா கம்பனி (ரூ. '000) | வரையறுத்த சுமிதா கம்பனி (ரூ. '000) |
|---|---|---|
| விற்பனைகள் | 6000 | 7500 |
| விற்பனைக் கிரயம் | (4000) | (5800) |
| மொத்த இலாபம் | 2000 | 1700 |
| செலவுகள் | (1100) | (800) |
| வரிக்கு முந்திய இலாபம் | 900 | 900 |
| வருமான வரி | (300) | (300) |
| ஆண்டிற்கான இலாபம் | 600 | 600 |

31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான பின்வரும் தகவல்களும் கிடைக்கப்பெற்றன.

| | மதுரா கம்பனி (ரூ. '000) | சுமிதா கம்பனி (ரூ. '000) |
|---|---|---|
| சராசரி சரக்கிருப்பு | 1600 | 2900 |
| சராசரி வியாபாரக் கடன்பட்டோர் | 2400 | 2500 |
| 31.03.2013 இல் உரிமையாண்மை | 3000 | 2400 |
| 31.03.2013 இல் நீண்டகாலக் கடன்கள் | 3600 | 1800 |
| செலவுகளில் உள்ளடங்கியுள்ள கடன் வட்டி | 300 | 200 |



Download Past Papers at : www.freebooks.lk

**வேண்டப்படுவது:**

(1) இரண்டு கம்பனிகளுக்குமான பின்வரும் விகிதங்கள்:
- (i) உரிமையாண்மை மீதான திரும்பல்
- (ii) வட்டிக் காப்பு
- (iii) சரக்கிருப்புப் புரள்வு
- (iv) கடன்பட்டோர் புரள்வு (சகல விற்பனைகளும் கடன் அடிப்படையில் இடம்பெறுவதாகக் கொள்க)
- (v) கடன்-உரிமையாண்மை

(2) மேலே (1) இலுள்ள கணிப்பீடுகளின் அடிப்படையில் பின்வருவனவற்றைக் காரணங்களுடன் குறிப்பிடுக.
- (i) உரிமையாளர்களுக்கு உயர்வான திரும்பலை வழங்கும் கம்பனி
- (ii) ஆகக் கூடுதலான கடன் மூலதனத்தை பயன்படுத்தும் கம்பனி
- (iii) கடன்பட்டோரிடமிருந்து பணத்தைச் சேகரிப்பதற்காக நீண்ட காலத்தை எடுக்கும் கம்பனி
- (iv) குறுகிய காலப்பகுதியில் சரக்கிருப்புக்களை விற்பனை செய்யும் கம்பனி
- (v) கடனிற்கான வட்டியை செலுத்துவதற்கு உயர்வான இயலுமையைக் கொண்டுள்ள கம்பனி

*(10 புள்ளிகள்)*

*(மொத்தம் 15 புள்ளிகள்)*

**வினா இல. 05 இற்கான உத்தேச விடைகளும் புள்ளித்திட்டமும்**

05) (அ) (1) 2013 - மார்ச் மாதத்திற்கான கம்பனி ஊழியர்களுக்கான மொத்தச் செலவுகள்

| | | ரூ.'000 |
|---|---|---|
| அடிப்படைச் சம்பளம் | - | 8 000 |
| மேலதிக நேரக் கொடுப்பனவு | - | 500 |
| ஊழியர் சேமலாப நிதி | - | 1 200 |
| ஊழியர் நம்பிக்கை நிதி | - | 240 |
| ஊழியர்களுக்கான மொத்தச் செலவுகள் | - | 9 940 |

**(3 புள்ளிகள்)**

(2)

**சம்பளக் கட்டுப்பாட்டுக் கணக்கு** (ரூ'000)

| | | | |
|---|---|---|---|
| ஊழியர் சேமலாப நிதி | 300 | சம்பளக் கணக்கு | 8 500 |
| தொழிற்சங்க அங்கத்துவ கட்டணம் | 250 | | |
| ஊழியர் கடன் அறவீடு | 450 | | |
| சம்பள சென்மதி கணக்கு | 7 000 | | |
| | 8 500 | | 8 500 |

**சம்பள சென்மதிக் கணக்கு** (ரூ'000)

| | | | |
|---|---|---|---|
| காசு | 6 350 | மீதி/கீ/கொ/வ | 6 350 |
| மீதி/கீ/கொ/செ | 7 000 | சம்பளக் கட்டுப்பாட்டுக் க/கு | 7 000 |
| | 13 350 | | 13 350 |

**ஊழியர் சேமலாப நிதி சென்மதி கணக்கு** (ரூ'000)

| | | | |
|---|---|---|---|
| காசு | 1 750 | மீதி/ கீ/கொ/வ | 1 750 |
| மீதி/ கீ/கொ/செ | 2 000 | சம்பளக் கட்டுப்பாட்டுக் க/கு | 800 |
| | | ஊழியர் சேமலாப நிதி செலவுக் க/கு | 1 200 |
| | 3 750 | | 3 750 |

**(2 உருப்படிகளுக்கு 1 புள்ளி வீதம் மொத்தம் 07 புள்ளிகள்)**

**(07 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

(ஆ) (1)

| | வரையறுத்த மதுரா கம்பனி | வரையறுத்த சுமிதா கம்பனி |
|---|---|---|
| (i) உரிமையாண்மை மீதான திரும்பல் வீதம் :- $\frac{\text{வரிக்குப் பின்லாபம்}}{\text{உரிமையாண்மை}} \times 100$ | $\frac{600\,000}{3\,000\,000} \times 100$<br>20% (01) | $\frac{600\,000}{2\,400\,000} \times 100$<br>25% (01) |
| (ii) வட்டிக்காப்பு விகிதம் :- $\frac{\text{வரிக்கு முன்லாபம் + வட்டி}}{\text{வட்டி}}$ | $\frac{900\,000 + 300\,000}{300\,000}$<br>4 தடவைகள் (01) | $\frac{900\,000 + 200\,000}{200\,000}$<br>5.5 தடவைகள் (01) |
| (iii)சரக்கிருப்பு புரள்வு :- $\frac{\text{விற்பனைக் கிரயம்}}{\text{சராசரிக் கையிருப்பு}}$ | $\frac{4\,000\,000}{1\,600\,000}$<br>2.5 தடவைகள்(01) | $\frac{5\,800\,000}{2\,900\,000}$<br>2 தடவைகள் (01) |
| (iv) கடன்பட்டோர் புரள்வு விகிதம்:- $\frac{\text{கடன் விற்பனை}}{\text{சராசரிக் கடன்பட்டோர்}}$ | $\frac{6\,000\,000}{2\,400\,000}$<br>2.5 தடவைகள்(01) | $\frac{7\,500\,000}{2\,500\,000}$<br>3 தடவைகள் (01) |
| (v) கடன் - உரிமையாண்மை விகிதம் :- $\frac{\text{நீண்டகாலக் கடன்}}{\text{உரிமையாண்மை}}$ | $\frac{3\,600\,000}{3\,000\,000}$<br>1.2 : 1<br>1.2/120% (01) | $\frac{1\,800\,000}{2\,400\,000}$<br>0.75%<br>0.75/75% (01) |

**(10 புள்ளிகள்)**

(2)

| கம்பனிகள் | | காரணங்கள் | |
|---|---|---|---|
| (i) வரையறுத்த சுமிதா கம்பனி | (01) | உரிமையாண்மை மீதான திரும்பல் கூடுதலாகக் காணப்படல். | (01) |
| (ii) வரையறுத்த மதுரா கம்பனி | (01) | உரிமையாண்மை விகிதம் உயர்வாக இருத்தல். | (01) |
| (iii) வரையறுத்த மதுரா கம்பனி | (01) | கடன்பட்டோர் புரள்வு விகிதம் குறைவாக இருத்தல். | (01) |
| (iv) வரையறுத்த மதுரா கம்பனி | (01) | சரக்கிருப்பு புரள்வு விகிதம் உயர்வாக இருத்தல். | (01) |
| (v) வரையறுத்த சுமிதா கம்பனி | (01) | வட்டிக் காப்பு விகிதம் உயர்வாக இருத்தல் | (01) |

**(10 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**5 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகள் 15 x 2 = 30 ஆகும். 5 ம் வினாவினை 65% வீதத்தினரே தெரிவு செய்திருந்தனர்.
அதில் 00 - 07 புள்ளி ஆயிடையில் 38% ம்,
08 - 15 புள்ளி ஆயிடையில் 26% ம்,
16 - 23 புள்ளி ஆயிடையில் 22% ம்,
24 - 30 புள்ளி ஆயிடையில் 14% ம்,
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இவ்வினாவிற்கு 24 புள்ளிகள் அல்லது அதற்கும் மேலான புள்ளிகள் பெற்றவர்களின் எண்ணிக்கை 14% மாக இருப்பதுடன், விண்ணப்பதாரிகளில் 38% மானோர் 07 அல்லது அதனையும் விடக் குறைவான புள்ளிகளையே பெற்றுள்ளனர்.




இவ்வினாவிற்குரிய உபபகுதிகள் 12 இல் 5 இற்கான இலகுச்சுட்டி 60% த்தை விட அதிகமாகும்.
ஆகக்கூடிய இலகுதன்மை (ஆ) (i) (iv) 75% மாகும். குறைந்த இலகுதன்மை (அ) (2) 30% ம் (ஆ) (2) (iv) 38% ம் ஆகும்.

(5) (அ) (1) இன் இலகுதன்மை 65% மாகும். கம்பனியின் ஊழியர்களுக்கான மொத்தச் செலவினைக் கணிப்பதற்கு கம்பனியின் ஊழியர் சேமலாப நிதிப் பங்களிப்பினையும், ஊழியர் நம்பிக்கை நிதிப் பங்களிப்பினையும் கூட்டுதல் வேண்டும் என்பதை சில மாணவர்கள் விளங்கியிருக்கவில்லை.

(அ) (2) இன் இலகுதன்மை 38% மாகும். சம்பளக் கிரயத்திற்கான தகவல்களைச் சரியாகக் கணக்குகளில் பதிவு செய்வதற்கு பெரும்பாலான மாணவர்களினால் முடியாமற் போயிருந்தது.

ஊழியர்களின் சம்பளத்திற்கான உழைப்புக்கள், கழிப்பனவுகளை நடைமுறையில் காணப்படும் சம்பள அட்டவணையின் உதவியுடன் தெளிவாக விளக்குவதுடன், அத்தகவல்கள் எவ்வாறு கணக்குகளில் பதிவு செய்யப்படுகின்றது என்பது தொடர்பிலான செயற்பாடுகள் சரியாக விளங்கக்கூடியவாறு கற்றல் - கற்பித்தல் ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.

(ஆ) (1) ல் 5 பகுதிகளுக்கு 50% த்திற்குமதிகமான இலகுதன்மை காணப்படுகின்து. (ஆ) (2) ல் (iii), (iv) என்பவற்றின் இலகுதன்மை முறையே 40% மும் 38% மும் ஆகும். இருப்புப்புரள்வு விகிதத்தினூடாக இருப்பானது விற்பனை செய்யப்படுவதற்கு எடுக்கப்படுகின்ற காலத்தினை அறிந்து கொள்வதற்கும், கடன் பட்டோர் புரள்வு விகிதத்தினூடாக கடன் பட்டோரிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொள்வதற்கு எடுக்கின்ற காலத்தையும் தீர்மானிக்க முடியுமென்பது தொடர்பிலான விளக்கம் மாணவர்களிடம் காணப்படவில்லை.

விகிதங்களுக்கிடையிலான தொடர்புகள் ஏற்படுகின்ற முறையினை விளங்கக்கூடியவாறு கூறப்பட்ட நிதிக்கூற்றுக்களினூடாக விகிதங்களை கணித்தல், வணிகங்களை ஒப்பிடல் என்பவை தொடர்பில் சிறந்த விளக்கத்தை பெற்றுக்கொடுக்கக் கூடியவாறு கற்றல் கற்பித்தல் செயற்பாடுகள் ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.




Download Past Papers at : www.freebooks.lk

## வினா இலக்கம் - 06

**6.** (அ) நாதன் PLC நிறுவனத்தின் 31.03.2012 இலுள்ளவாறான ஆதனம், பொறி மற்றும் உபகரணம் தொடர்பான தகவல்கள் பின்வருமாறு.

| சொத்து | கிரயம் (ரூ. '000) | கொண்டுசெல் தொகை (ரூ. '000) | எஞ்சியபெறுமதி (ரூ. '000) | எதிர்பார்க்கப்படும் ஆயுட்காலம் (வருடங்கள்) |
|---|---|---|---|---|
| காணி | 3500 | 3000 | - | - |
| கட்டடம் | 2500 | 1000 | - | 25 |
| மோட்டார் வாகனம் | 5000 | 3200 | 500 | 5 |
| அலுவலக உபகரணம் | 500 | 400 | 100 | 4 |

இத்திகதியில், கம்பனியானது மோட்டார் வாகனமொன்றை மட்டுமே சொந்தமாக வைத்திருந்தது. சொத்துக்களிற்கு கிரயத்தின் மீது நேர்கோட்டு முறையில் பெறுமானத்தேய்வு செய்யப்படுகிறது.

31.03.2012 இல் முடிவடைந்த ஆண்டிற்கான காணி மீள் மதிப்பு நட்டம் ரூபா 500 000 ஆகும்.

இச்சொத்துக்கள் தொடர்பில் 31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டில் இடம்பெற்ற கொடுக்கல்வாங்கல்கள் வருமாறு:

| திகதி | கொடுக்கல்வாங்கல் |
|---|---|
| 01.04.2012 | ரூபா 1250000 செலவில் கட்டட விஸ்தரிப்பு செய்யப்பட்டது. இதன் விளைவாக கட்டடத்தின் எஞ்சியுள்ள பயன்தரு ஆயுட்காலம் 10 ஆண்டுகளில் இருந்து 15 ஆண்டுகளாக அதிகரித்தது. |
| 01.10.2012 | ரூபா 3000000 இற்கு மோட்டார் வாகனம் விற்கப்பட்டதுடன் ரூபா 4000000 இற்கு புதிய மோட்டார் வாகனமொன்று வாங்கப்பட்டது. புதிய மோட்டார் வாகனத்தின் எதிர்பார்க்கப்படும் பயனுள்ள ஆயுட்காலம் 6 ஆண்டுகளாக ஆகும். அதன் எஞ்சிய பெறுமதி ரூபா 400000 ஆகும். |
| 01.01.2013 | ரூபா 50000 செலவில் அலுவலக உபகரணங்கள் திருத்தியமைக்கப்பட்டது. |
| 31.03.2013 | ரூபா 4000000 ஆக காணி மீள்மதிப்பிடப்பட்டது. |

மேலேயுள்ள கொடுக்கல்வாங்கல்களைச் சீராக்குவதற்கு முன்னர் 31.03.2013 இல் உள்ளபடியான நிறுவனத்தின் உரிமையாண்மை ரூபா 1000000 ஆகும்.

**வேண்டப்படுவது:**

(1) ஆதனம், பொறி மற்றும் உபகரணங்களின் உருப்படி ஒவ்வொன்றிற்கும் 31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான பெறுமானத்தேய்வுகளைக் கணிப்பிடுக.

(2) மேலேயுள்ள கொடுக்கல்வாங்கல்களைச் சீராக்கியதன் பின்னர் நிறுவனத்தின் 31.03.2013 இல் உள்ளபடியான் உரிமையாண்மையைக் கணிக்குக.

*(05 புள்ளிகள்)*

(ஆ) குமுதா PLC நிறுவனத்தின் நிதிக் கூற்றுக்களின் சுருக்கம் கீழே தரப்படுகின்றது.

**குமுதா PLC நிறுவனத்தின்**

**31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான வருமானக் கூற்று**

| | ரூபா '000 | ரூபா '000 |
|---|---|---|
| விற்பனைகள் ............................................................ | | 7200 |
| விற்பனைக் கிரயங்கள் ................................................ | | (4200) |
| மொத்த இலாபம் | | 3000 |
| காணி விற்பனையிலிருந்தான இலாபம் | | 300 |
| பெறுமானத்தேய்வு - கட்டடம் | 500 | |
| - அலுவலக உபகரணம் | 800 | |
| ஏனைய செலவுகள் | 1000 | (2300) |
| வரிக்கு முந்திய இலாபம் | | 1000 |
| வருமானவரி | | (300) |
| ஆண்டிற்கான இலாபம் | | 700 |



Download Past Papers at : www.freebooks.lk

குமுதா PLC நிறுவனத்தின்
31 மார்ச்சில் உள்ளபடியான நிதி நிலைமைக் கூற்று (ஐந்தொகை)

| | 2013 (ரூ. '000) | 2012 (ரூ. '000) |
|---|---|---|
| காணி | 5000 | 9000 |
| கட்டடம் - கிரயத்தில் | 10000 | 10000 |
| திரண்ட பெறுமானத்தேய்வு - கட்டடம் | (5000) | (4500) |
| அலுவலக உபகரணம் - கிரயத்தில் | 8000 | 4000 |
| திரண்ட பெறுமானத்தேய்வு - அலுவலக உபகரணம் | (2400) | (1600) |
| சரக்கிருப்பு | 1400 | 1000 |
| வியாபாரக் கடன்பட்டோர் | 1500 | 1200 |
| வங்கியிலுள்ள காசு | 1500 | 500 |
| | 20000 | 19600 |
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | 14000 | 13000 |
| நிறுத்தி வைத்த வருவாய்கள் | 4200 | 4000 |
| வியாபாரக் கடன்கொடுத்தோர் | 1500 | 2000 |
| செலுத்த வேண்டிய வருமானவரி | 300 | 600 |
| | 20000 | 19600 |

**மேலதிக தகவல்கள் :**

(i) சகல கொள்வனவுகளும் விற்பனைகளும் கடன் அடிப்படையில் மேற்கொள்ளப்படுகின்றன.

(ii) 01.04.2012 இல் கம்பனியானது 10000 பங்குகளை ரூபா 1000000 இற்கு வழங்கியுள்ளது.

(iii) காணியின் ஒரு பகுதியானது ரூபா 4300000 காசுக்கு விற்கப்பட்டது.

(iv) 31.03.2013 இல் ரூபா 4000000 இற்கு அலுவலக உபகரணங்கள் காசுக்கு வாங்கப்பட்டது.

(v) இவ்வாண்டில் இடைக்காலப் பங்கிலாபமாக ரூபா 500000 செலுத்தப்பட்டது.

**வேண்டப்படுவது :**

பொருத்தமான இலங்கைக் கணக்கீட்டு நியமத்திற்கு அமைய 31.03.2013 இல் முடிவடைந்த ஆண்டிற்கான குமுதா PLC நிறுவனத்தின் காசுப் பாய்ச்சற் கூற்று **(10 புள்ளிகள்)**

**(மொத்தம் 15 புள்ளிகள்)**

**வினா இல. 06 இற்கான உத்தேச விடைகளும் புள்ளித்திட்டமும்**

(அ) (1)

கட்டட பெறுமானத்தேய்வு = ரூ. 150 000 (02)

செய்கை

$$\frac{1\,000\,000 + 1\,250\,000 \;(01)}{15 \;(01)}$$

மோட்டார் வாகன பெறுமானத்தேய்வு = ரூ. 750 000 (02)

செய்கை :

பழைய வாகனம் $= \frac{(5\,000\,000 - 500\,000)}{5} \times 1/2$

= ரூ. 450 000 (01)

புதிய வாகனம் $= \frac{(4\,000\,000 - 400\,000)}{6} \times 1/2$

= ரூ. 300 000 (01)

அலுவலக உபகரண பெறுமானத்தேய்வு = ரூ. 100 000 (01)

செய்கை

$$\frac{500\,000 - 100\,000}{4}$$

(05 புள்ளிகள்)



Download Past Papers at : www.freebooks.lk

(2)

2013.03.31 உரிமையாண்மை கணிப்பீட்டு கூற்று

| | ரூ'000 | ரூ'000 |
|---|---|---|
| 31/3/2012இல் உரிமையாண்மை | 1 000 | |
| கூட்டவும் : | | |
| மோட்டார் வாகன விற்பனைலாபம் | 250 (02) | |
| காணி மீள் மதிப்பீட்டுலாபம் | 1 000 (01) | 1 250 |
| | | 2 250 |
| கழிக்கவும் : | | |
| தேய்வு- கட்டிட பெறுமானத்தேய்வு | 150 | |
| மோட்டார் வாகன பெறுமானத்தேய்வு | 750 (01) | |
| அலுவலக உபகரண பெறுமானத்தேய்வு | 100 | |
| அலுவலக உபகரண திருத்தியமைத்தல் செலவு | 50 (01) | (1 050) |
| 31/3/2013ல் உரிமையாண்மை மீதி | | 1 200 |

**(05 புள்ளிகள்)**

செய்கை : ரூ'000

**மோட்டார் வாகன விற்பனைக் கணக்கு**

| | | | |
|---|---|---|---|
| மோட்டார் | 5 000 | பெ.தே. ஏற்பாடு | 2 250 |
| இலாபம் | 250 | காசு | 3 000 |
| | 5 250 | | 5 250 |

(இரண்டு உருப்படிகளுக்கு 01 புள்ளி வீதம் மொத்தமாக 02 புள்ளிகள்.)



Download Past Papers at : www.freebooks.lk

(ஆ) குமுதா PLC நிறுவனம்

31/3/2013ல் முடிவடைந்த ஆண்டிற்கான (01)

காசுப்பாய்ச்சற் கூற்று

ரூ'000

| | | |
|---|---|---|
| **செயற்பாட்டு நடவடிக்கை** | | |
| கடன்பட்டோரிடம் பெற்ற காசு | 6 900 (02) | |
| கடன்கொடுத்தோருக்குக் கொடுத்த காசு | (5 100) (04) | |
| செயற்பாட்டுச் செலவுக்கு செலுத்திய காசு | (1 000) (01) | |
| செயற்பாட்டில் உருவான காசு | | 800 |
| செலுத்திய வரி | | (600) (02) |
| செயற்பாட்டு நடவடிக்கைமூலம் உருவான காசுப்பாய்ச்சல் (01) | பெறுமதிகளுடன் கூடிய தொகைக்கு | 200 |
| **முதலீட்டு நடவடிக்கை** | | |
| காணி விற்பனை | 4 300 (01) | |
| அலுவலக உபகரணம் கொள்வனவு | (4 000) (01) | |
| நிதி நடவடிக்கைகளின் மூலம் உருவான தேறிய காசுப்பாய்ச்சல் (01) | பெறுமதிகளுடன் கூடிய தொகைக்கு | 300 |
| **நிதிநடவடிக்கை** | | |
| சாதாரண பங்கு வழங்கல் | 1 000 (01) | |
| செலுத்திய பங்குலாபம் | (500) (01) | |
| நிதி நடவடிக்கைகளின் மூலம் உருவான தேறிய காசுப்பாய்ச்சல் (01) | பெற்ற பெறுமதி | 500 |
| காசும் காசுக்குச் சமமானவற்றின் தேறிய அதிகரிப்பு (01) | பெற்ற பெறுமதி | 1 000 |
| ஆரம்ப காசும் காசுக்கு சமனானவை | | 500 (01) |
| இறுதி காசும் காசுக்கு சமனானவை | | 1 500 (01) |

செய்கை : ரூ'000

**கடன்பட்டோர் கணக்கு**

| | | | |
|---|---|---|---|
| மீதி | 1 200 (01) | காசு | 6 900 |
| விற்பனை | 7 200 (01) | மீதி/கீ/கொ/செ | 1 500 (01) |
| | 8 400 | | 8 400 |

**வருமாவரிக் கணக்கு**

| | | | |
|---|---|---|---|
| காசு | 600 | மீதி | 600 (01) |
| மீதி/கீ/கொ/செ | 300 (01) | பகிர்வு கணக்கு | 300 (01) |
| | 900 | | 900 |

**கடன்கொடுத்தோர் கணக்கு**

| | | | |
|---|---|---|---|
| காசு | 5 100 | மீதி | 2 000 (01) |
| மீதி/கீ/கொ/செ | 1 500 (01) | கொள்வனவு | 4 600 (02) |
| | 6 600 | | 6 600 |

| | | |
|---|---|---|
| ஆரம்ப இருப்பு | 1 000 | 01 |
| கொள்வனவு | 4 600 | |
| | 5 600 | |
| இறுதியிருப்பு | (1 400) | 01 |
| விற்பனைக்கிரயம் | 4 200 | |



Download Past Papers at : www.freebooks.lk

அல்லது :

**குமுதா PLC நிறுவனம்**
**31/3/2013ல் முடிவடைந்த ஆண்டிற்கான (01)**
**காசுப்பாய்ச்சற் கூற்று**

ரூ'000

| | | |
|---|---|---|
| **செயற்பாட்டு நடவடிக்கை** | | |
| வரிக்கு முன் லாபம் | | 1 000 (01) |
| சீராக்கல் | | |
| காணி விற்பனை இலாபம் | (300) (02) | |
| பெறுமானத் தேய்வு | 1 300 (01) | 1 000 |
| தொழிற்படும் மூலதன அசைவுக்கு முன் செயற்பாட்டு இலாபம் | | 2 000 |
| **தொழிற்படு மூலதனத்தின் மாற்றங்கள் :** | | |
| சரக்கிருப்பு அதிகரிப்பு | (400) (01) | |
| கடன்பட்டோர் அதிகரிப்பு | (300) (01) | |
| கடன்கொடுத்தோர் குறைவு | (500) (01) | (1 200) |
| செயற்பாட்டில் உருவான காசு | | 800 |
| செலுத்திய வருமானவரி | | (600) (02) |
| செயற்பாட்டு நடவடிக்கையில் உருவான தேறிய காசுப்பாய்ச்சல் (01) | | 200 |
| **முதலீட்டு நடவடிக்கை** | | |
| காணி விற்பனை | 4 300 (01) | |
| அலுவலக உபகரணம் கொள்வனவு | (4 000) (01) | |
| முதலீட்டு நடவடிக்கைகளில் உருவான தேறிய காசுப்பாய்ச்சல் (01) | | 300 |
| **நிதியீட்ட நடவடிக்கை** | | |
| சாதாரண பங்கு வழங்கல் | 1 000 (01) | |
| செலுத்திய பங்குலாபம் | (500) (01) | |
| நிதியீட்ட நடவடிக்கைகளில் உருவான தேறிய காசுப்பாய்ச்சல் (01) | | 500 |
| காசும் காசுக்கு சமமானவற்றின் தேறிய அதிகரிப்பு (01) | | 1 000 |
| ஆரம்ப காசும் காசுக்கு சமமானவை | | 500 (01) |
| இறுதி காசும் காசுக்கு சமமானவை | | 1 500 (01) |

**(20 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

**6 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகள் 15 x 2 = 30 ஆகும்.
6 ம் வினாவினை விண்ணப்பதாரிகளில் 66% மானோர் மாத்திரமே தெரிவு செய்துள்ளனர்.
அதில் 00 - 07 புள்ளி ஆயிடையில் 32% ம்,
08 - 15 புள்ளி ஆயிடையில் 25% ம்,
16 - 23 புள்ளி ஆயிடையில் 27% ம்,
24 - 30 புள்ளி ஆயிடையில் 16% ம்,
என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இவ்வினாவிற்கு 24 புள்ளிகள் அல்லது அதனை விடக்கூடுதலான புள்ளிகளைப் பெற்றவர்களின் எண்ணிக்கை 16% மாக இருப்பதுடன், விண்ணப்பதாரிகளில் 32% மானவர்கள் 07 அல்லது அதனையும் விடக் குறைவான புள்ளிகளையேப் பெற்றுள்ளனர்.




இவ்வினாவிற்குரிய உபபகுதி 3 ன் (ஆ) பகுதியின் இலகுதன்மை 65% மாகும். இலகுதன்மை குறைவான உபபகுதி (அ) (2) ஆகும். அதன் இலகுதன்மை 19% மாகும்.

(6) (அ) (1) பகுதியின் இலகுதன்மை 39% மாகும். ஆதனம் பொறி மற்றும் உபகரணங்களின் தேய்வு கணிப்பீடு தொடர்பிலான விளக்கம் மாணவர்களிடம் மிகக் குறைந்த மட்டத்திலே காணப்படுகின்றது.

(அ) (2) பகுதியின் இலகுதன்மை 19% மாகும். வருமானங்கள், செலவுகளின் சீராக்கங்களினால் ஏற்படுகின்ற தாக்கத்தினை சரியாகக் கணிப்பிடுவதற்கு பெரும்பாலான மாணவர்களுக்கு முடியாமற் போயிருந்துது.

ஆதனம் பொறி மற்றும் உபகரணங்களுக்கான சொத்து மீள் மதிப்பீட்டில் பயன்படு ஆயுற்காலங்களின் மாற்றம் பிற்கால கிரயங்களைச் சுமத்துதல் போன்ற பிரச்சினைகளின் மூலம் உருவாகின்ற தாக்கங்களைச் சரியாகக் கணிப்பிடுவதற்கு பெரும்பாலான மாணவர்களுக்கு முடியாமற் போயிருந்தது.

(ஆ) பகுதியின் இலகுன்மை 65% மாகும். கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கின் மூலம் வாடிக்கையாளரிடமிருந்து கிடைக்கப் பெற்ற காசைக் கண்டுபிடிப்பது விற்பனைப் பொருட்களின் கிரயத்தின் உதவியுடன் கொள்வனவைக் கண்டுபிடிப்பது, கடன் கொடுநருக்கான காசுக் கொடுப்பனவைக் கண்டுபிடிப்பது தொடர்பிலான விளக்கம் சில மாணவர்களிடம் காணப்படவில்லை. இவ்விளக்கம் கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் வேண்டும்.



Download Past Papers at : www.freebooks.lk

## வினா இலக்கம் - 07

7. (அ) உற்பத்திக் கம்பனி ஒன்றின் கடன்பட்டோர் பேரேட்டில் இருந்து 2013 ஜூன் மாதத்திற்காக பிரித்தெடுத்த தகவல்கள் பின்வருமாறு (சகல தொகைகளும் ரூ. '000)

| கடன்பட்டோர் | 01.06.2013 இல் மீதி | விற்பனைகள் | பெற்ற காசு | கொடுத்த கழிவு | அறவிட முடியாக் கடன்கள் | 30.06.2013 இல் மீதி |
|---|---|---|---|---|---|---|
| அஜித் | 300 | 1400 | 1000 | 140 | - | 560 |
| தயான் | 200 | 300 | 200 | 30 | - | 270 |
| மல்லிகா | - | 100 | - | - | 40 | 60 |
| கமலா | 100 | 100 | - | - | 20 | 180 |
| **மொத்தம்** | **600** | **1900** | **1200** | **170** | **60** | **1070** |

30.06.2013 இல் கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு மீதியும் கடன்பட்டோர் பேரேட்டு மீதிகளின் மொத்தமும் இணங்கவில்லை. அதனைத் தொடர்ந்து பரிசீலித்தபோது பின்வரும் தவறுகள் கண்டுபிடிக்கப்பட்டன.

(i) மாதத்திற்கான விற்பனைகளானது கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் ரூபா 1 090 000 ஆக பதியப்பட்டுள்ளது. எனினும் இது விற்பனைக் கணக்கில் சரியாகப் பதிவு செய்யப்பட்டிருந்தது.

(ii) ரூபா 600 000 கடனிற்கு விற்பனை செய்யப்பட்ட இயந்திரமொன்றின் விற்பனைத் தொகையானது விற்பனையாகக் கருதப்பட்டு கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் பதியப்பட்டுள்ளது.

(iii) இம்மாதத்தில் பதிவழிக்கப்பட்ட அறவிட முடியாக் கடன்களானது கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் பதியப்படவில்லை. பதிலாக, இவைகள் ஐயக்கடன் ஏற்பாட்டுக் கணக்கில் செலவு வைக்கப்பட்டுள்ளது.

(iv) கடன்பட்டோருக்குக் கொடுத்த கழிவுகளானது கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது. எனினும், இது கொடுத்த கழிவுக் கணக்கில் சரியாகப் பதியப்பட்டுள்ளது.

**வேண்டப்படுவது:**

(1) 30.06.2013 இல் உள்ளபடியான கடன்பட்டோர் பேரேட்டு மீதியையும் கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு மீதியையும் இணக்கம் செய்வதற்கான கூற்று

(2) மேலேயுள்ள (i) மற்றும் (iv) ஆகியவற்றின் தவறுகளைத் திருத்துவதற்கான நாட்குறிப்புப் பதிவுகள் (விளம்பல்கள் வேண்டப்படுகின்றன).

*(05 புள்ளிகள்)*

(ஆ) கம்பனி ஒன்று தனது உற்பத்திச் செயன்முறையின் வினைத்திறனை அதிகரிப்பதற்காகப் புதிய இயந்திரமொன்றை வாங்குவதற்கு எண்ணுகின்றது. இது தொடர்பாகப் பின்வரும் தகவல்கள் கிடைக்கப்பெற்றன.

(i) இயந்திரம் தொடர்பான தகவல்கள் :

| | |
|---|---|
| கிரயம் | ரூபா 1 000 000 |
| பயனுள்ள ஆயுட்காலம் | 5 ஆண்டுகள் |
| எஞ்சிய பெறுமதி | ரூபா 100 000 |
| வருடாந்த பராமரிப்பு கிரயம் | ரூபா 50 000 |

(ii) இப்புதிய இயந்திரத்தைச் பயன்படுத்துவதன் மூலம் வருடாந்தம் ரூபா 250 000 நேர் ஊழியக் கிரயங்களை சேமிக்க முடியும்.

(iii) இப்புதிய இயந்திரம் வாங்கப்படுமானால் பழைய இயந்திரத்தை ரூபா 150 000 இற்கு விற்க முடியும்.

(iv) 10% திரும்பல் வீதத்தில் கழிவீட்டு காரணிகள் :

| ஆண்டு | 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|---|
| கழிவீட்டுக் காரணி | 0.91 | 0.83 | 0.75 | 0.68 | 0.62 |

**வேண்டப்படுவது:**

மேலே கூறப்பட்ட செயற்றிட்டம் தொடர்பில்:

(1) ஒவ்வொரு வருடத்துக்குமான காசு உட்பாய்ச்சல்களும் காசு வெளிப்பாய்ச்சல்களும்

(2) திரும்பப் பெறும் காலம்

(3) கணக்கீட்டு திரும்பல் வீதம் (ஆரம்ப முதலீட்டின் அடிப்படையில்)

(4) தேறிய நிகழ்காலப் பெறுமதி

(5) தேறிய நிகழ்காலப் பெறுமதியின் அடிப்படையில் இயந்திரத்தை கொள்வனவு செய்ய வேண்டுமா என்பதற்கான சிபாரிசு

*(10 புள்ளிகள்)*

*(மொத்தம் 15 புள்ளிகள்)*



Download Past Papers at : www.freebooks.lk

**வினா இல. 07 இற்கான உத்தேச விடைகளும் புள்ளித்திட்டமும்**

(அ) (1) **31/6/2013 இல் உள்ளபடியான கடன்பட்டோர் பேரேட்டு மீதியையும் கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு மீதியையும் இணக்கும் கூற்று**

(ரூ'000)

| | | |
|---|---|---|
| 30/6/2013 கடன்பட்டோர் பேரேட்டு பட்டியல் மீதி | | 1 070 (01) |
| கூட்டுக : | | |
| இயந்திர விற்பனை | 600 (01) | |
| அறிவிடமுடியாக் கடன் | 60 (01) | |
| கொடுத்த கழிவு | 340 (01) | 1 000 |
| | | 2 070 |
| கழிக்குக : | | |
| விற்பனை | 810 (01) | (810) |
| 30/06/2013ல் கடன்பட்டோர் கட்டுப்பாட்டு கணக்கு | | 1 260 (01) |

**(06 புள்ளிகள்)**

(2) **நாட்குறிப்பு** (ரூ'000)

| விபரம் | வரவு | செலவு |
|---|---|---|
| கடன்பட்டோர் கட்டுப்பாட்டு கணக்கு<br>தொங்கல் கணக்கு<br>(கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் குறைத்துப் பதிந்த கடன் விற்பனை திருத்தப்பட்டது) | 810 | 810 (02) |
| தொங்கல் கணக்கு<br>கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு<br>(கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் வரவில் பதிந்த கொடுத்த கழிவைத் திருத்தியது) | 340 | 340 (02) |

**(04 புள்ளிகள்)**

(ஆ) (1) **வருடாந்த காசுப்பாய்ச்சல்கள்** (ரூ'000)

| விபரம் / வருடம் | 0 | 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|---|---|
| காசு உட்பாய்ச்சல் : | | | | | | |
| பழைய இயந்திர விற்பனை | 150 (01) | | | | | |
| விற்பனை | | | | (02) | | |
| நேர்ஊழிய கிரய சேமிப்பு | - | 250 | 250 | 250 | 250 | 250 |
| புதிய இயந்திர எஞ்சும் பெறுமதி | - | - | - | - | - | 100 (02) |
| காசு வெளிப்பாய்ச்சல் : | | | | | | |
| இயந்திரக் கிரயம் | (1000) (01) | | | (02) | | |
| வருடாந்த பராமரிப்புக் கிரயம் | | (50) | (50) | (50) | (50) | (50) |
| | (850) | 200 | 200 | 200 | 200 | 300 |

**(08 புள்ளிகள்)**



Download Past Papers at : www.freebooks.lk

(2) திரும்பப் பெறும் காலம் = 4 வருடங்கள் 2 மாதங்கள் (03)

செய்கை (ரூ'000)

| வருடம் | தேறிய காசுப் பாய்ச்சல் | திரண்ட தேறிய காசுப்பாய்ச்சல் |
|---|---|---|
| 0 | (850) | (850) |
| 1 | 200 | (650) |
| 2 | 200 | (450) |
| 3 | 200 | (250) |
| 4 | 200 | (50) |
| 5 | 300 | 250 |

(3) கணக்கீட்டு திரும்பல் வீதம் = 4%/ 4.7%/ 5.8% (03)

**செய்கை**

$$= \frac{\text{சராசரி தேறியலாபம்}}{\text{ஆரம்ப முதலீடு}}$$

$$= \frac{40}{1000} \quad \frac{40}{850} \quad \frac{50}{850}$$

= 4% 4.7% 5.8%

(4) தேறிய நிகழ்காலப் பெறுமதி = ரூ. (30 000) (04)

**செய்கை** (ரூ'000)

| வருடம் | 10% கழிவுக்காரணி | தேறிய காசுப் பாய்ச்சல் | கழிவு செய்யப்பட்ட காசுப்பாய்ச்சல் |
|---|---|---|---|
| 0 | 1 | (850) | (850) (01) |
| 1 | 0.91 | 200 | 182 |
| 2 | 0.83 | 200 | 166 |
| 3 | 0.75 | 200 | (03) 150 — ලද අගයන්ට |
| 4 | 0.68 | 200 | 136 |
| 5 | 0.62 | 300 | 186 |
| | | NVP | (30) |

(5) தேறிய நிகழ்காலப் பெறுமதி எதிர்கணியமாக ரூ. 30 000 ஆக காணப்படுவதனால் இவ் இயந்திரத்தைக் கொள்வனவு செய்வது பொருத்தமானதல்ல. (02)



Download Past Papers at : www.freebooks.lk

**7 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவிற்கு ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகள் 15 x 2 = 30 ஆகும். 7 ம் வினாவினை விண்ணப்பதாரிகளில் 68% மானோர் மாத்திரமே தெரிவு செய்துள்ளனர்.

அதில் 00 - 07 புள்ளி ஆயிடையில் 46% ம்,
08 - 15 புள்ளி ஆயிடையில் 23% ம்,
16 - 23 புள்ளி ஆயிடையில் 18% ம்,
24 - 30 புள்ளி ஆயிடையில் 13% ம்,

என்றவாறு புள்ளிகளைப் பெற்றுள்ளனர். அதற்கேற்ப இவ்வினாவிற்கு 24 புள்ளிகள் அல்லது அதனை விடக்கூடுதலான புள்ளிகளைப் பெற்றவர்கள் 13% மாக காணப்படுவதுடன், விண்ணப்பதாரிகளில் 46% மானோ் 07 அல்லது அதனையும் விடக் குறைவான புள்ளிகளையேப் பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 07 உபபகுதிகளில் 3 பகுதிகளுக்கான இலகுதன்மை 50% இற்கும் மேற்பட்டதாகும். (ஆ) (3) இன் இலகுதன்மை 8% மாகும்.

(7) (அ) (1) பகுதியின் இலகுதன்மை 41% மாகும். கட்டுப்பாட்டுக் கணக்கில் ஏற்பட்டுள்ள தவறுகள், கடன் பட்டோர் பேரேட்டு மீதிகளில் ஏற்பட்டுள்ள தவறுகள், எவையென்பதை இனம் காணாமையும், இணக்கக் கூற்றினைத் தயாரிக்கும்போது அவற்றின் தாக்கத்தை சீராக்கும் முறையினையும் பெரும்பாலான மாணவர்கள் விளங்கியிருக்கவில்லை.

(அ) (2) பகுதியின் இலகுதன்மை 56% மாகும். பொதுக் குறிப்பேட்டில் வழுக்களைத் திருத்துவது தொடர்பிலான போதிய விளக்கம் சில மாணவர்களிடம் காணப்படவில்லை. ஆள்சார் கணக்கு, பொதுப் பேரேடு என்பவை தொடர்பில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைக்கும்போது பொதுப் பேரேட்டுக் கட்டுப்பாட்டுக் கணக்கு தொடர்பாகவும், ஆள்சார் கணக்குளின் மூலம் தயாரிக்கப்படுகின்ற மீதிப்பட்டியல் தொடர்பாகவும் மாணவர்களுக்கு சரியான அறிவினைப் பெற்றுக் கொடுத்தல் வேண்டும்.

(ஆ) (1) பகுதியின் இலகுதன்மை 53% மாகக் காணப்பட்டதுடன், 5 இன் இலகுதன்மை 58% மாகும்.

(ஆ) (2) பகுதியின் இலகுதன்மை 27% மாகும். காசு உட்பாய்ச்சல், காசு வெளிப்பாய்ச்சல் என்பவற்றை சரியாக இனம் கண்டிருந்தாலும் மீள் திரும்பல் காலத்தை அதனூடான மாணவர்களுக்கு கணிப்பிட முடியாமற் போயிருந்தது.

(ஆ) (3) பகுதியின்ன் இலகுதன்மை 8% மாகும். காசுப்பாய்ச்சலினூடாக ஒவ்வொரு வருடத்திற்குமான இலாபத்தை கணிப்பதற்கான விளக்கம் பெரும்பாலான மாணவர்களிடம் காணப்படவில்லை.




Download Past Papers at : www.freebooks.lk

செயற்றிட்டத்திற்கான காசு உட்பாய்ச்சல், காசு வெளிப்பாய்ச்சல்களை இனம்காணல், தேறிய காசுப்பாய்ச்சலினைக் கணிப்பிடல், அதனூடாக

* திரும்பல் காலத்தைக் கணிப்பிடல்
* காசுப் பாய்ச்சலின் மூலம் இலாபத்தைக் கணிப்பிடல்
* கழிவீட்டுக் காரணிகளின் மூலம் நிகழ்காலப் பெறுமதியினைக் கணிப்பிடல்
* நிகழ்காலப் பெறுமதியின் மூலம் தேறிய நிகழ்காலப் பெறுமதியினைக் கணிப்பிடல்
* தேறிய நிகழ்காலப் பெறுமதிக்கேற்ப பொருத்தமான செயற்றிட்டத்தை தெரிவு செய்தல்

என்பவை தொடர்பிலான விளக்கம் கிடைக்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்துக் கொள்ளல் வேண்டும்.



Download Past Papers at : www.freebooks.lk

2.2.3 **வினாத்தாள் II இற்கு விடையளித்தல் தொடர்பான முழு அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள் :**




வினாத்தாள் II இல் 4வது வினாவினைத் தவிர்ந்த ஏனைய வினாக்களின் இலகுதன்மை 43% அல்லது அதனை விடக் கூடுதலானதாகும்.

வினாத்தாள் II இலுள்ள வினாக்களில் 64% இற்கும் மேற்பட்ட இலகுதன்மையினை 3 வது வினாவிலே காண முடிந்ததுடன், குறைந்த இலகுதன்மையாகிய 35% இனை 4 வது வினாவில் காணமுடிந்தது.

முதலாவது இரண்டாவது வினாக்கள் கட்டாயமானதாகும். இவ்வினாக்களில் கூடுதலான இலகுதன்மை 2வது வினாவில் காட்டப்பட்டுள்ளதுடன் அதன் இலகுதன்மை 59% மாகும்.

3 வது வினா தொடக்கம் 7 வது வினா வரையான வினாக்களில் விண்ணப்பதாரிகள் தெரிவு செய்வதற்கான வினாக்களில் கூடுதலான இலகுதன்மையை காண முடிந்தது 3 ஆவது வினாவுக்கேயாகும். அதன் இலகுதன்மை 64% மாகும். வினாக்களைத் தெரிவு செய்யும்போதும் கூடுதலானோர் 3 வது வினாவையே தெரிவு செய்திருந்தனர். 2 வது வினாப்பத்திரத்தில் தெரிவு வினாக்களில் குறைந்த இலகுதன்மை காணப்பட்டது 4 வது வினாவிற்கேயாகும்.

தெரிவுசெய்வதற்கு வழங்கப்பட்ட வினாக்களில் இரண்டாவதாக 7 வது வினாவையே கூடுதலானோர் தெரிவு செய்துள்ளதுடன், 68% ஆவுதுடன் அதன் இலகுதன்மை 43% மாகும்.



Download Past Papers at : www.freebooks.lk

## பகுதி III

**3.0 விடையளிக்கும்போது அவதானிக்கப்பட வேண்டிய விடயங்களும் ஆலோசனைகளும் :**

**3.1. விடையளிக்கும் போது அவதானிக்கப்பட வேண்டிய விடயங்கள் :**

**பொதுவான அறிவுருத்தல்கள்**

* வினாப்பத்திரத்திலுள்ள பிரதான அறிவுறுத்தல்களை வாசித்து விளங்கிக்கொள்ள வேண்டும். அதாவது ஒவ்வொரு பகுதியிலுமிருந்து எத்தனை வினாக்களுக்கு விடையளிக்கப்பட வேண்டும், எந்த வினா கட்டாயமானது, எவ்வளவு காலம் வழங்கப்பட்டுள்ளது, எவ்வளவு புள்ளிகள் கிடைக்கப்பெறும் என்பன தொடர்பாகக் கவனத்திற் கொள்ளப்பட வேண்டும். வினாக்களை நன்கு வாசித்து சரியாக விளங்கி வினாக்கள் தெரிவு செய்யப்பட வேண்டும்.
* பத்திரம் I இற்கு விடையளிக்கும்போது மிகச் சரியான விடையை மட்டுமே தெரிவுசெய்ய வேண்டும்.
* பத்திரம் II இற்கு விடையளிக்கும்போது எல்லா பிரதான வினாக்களையும் புதிய தாளில் எழுதத் தொடங்க வேண்டும்.
* விடைகள் தெளிவான கையெழுத்தில் எழுதப்படல் வேண்டும்.
* பரீட்சார்த்திகள் விடைத்தாளின் எல்லாப் பக்கங்களிலும் உரிய இடங்களில் தமது சுட்டெண்ணை எழுதுதல் வேண்டும்.
* வினா இலக்கம், உபபிரிவுகளின் இலக்கங்கள் சரியாக எழுதப்பட வேண்டும்.
* சரியான சுருக்க விடையளிக்கத் தேவையான சந்தர்ப்பத்தில் விரிவாக விடையளிப்பதை தவிர்ப்பதோடு, விரிவாக விடையளிக்கத் தேவையான சந்தர்ப்பத்தில் சுருக்கமாக விடையளித்தலையும் தவிர்த்தல் வேண்டும்.
* வினாவில் கேட்கப்பட்டுள்ளவாறு விடைகள் தர்க்கரீதியாகவும், பகுப்பாய்வு முறையிலும் சமர்ப்பிக்கப்படல் வேண்டும்.
* II ஆம் வினாப்பத்திரத்திற்கு விடையெழுதும்போது பிரதான வினாவின் உபபிரிவுகள் அனைத்தையும் நன்கு வாசித்து ஒவ்வொரு உபபிரிவுக்குமான எதிர்பார்க்கப்பட்ட விடையினை மாத்திரம் எழுதுதல் வேண்டும்.
* வினாக்களுக்கு விடையளிக்கும்போது வழங்கப்பட்டுள்ள நேரத்தினை சரியான முறையில் முகாமைத்துவம் செய்துகொள்ள வேண்டும்.
* விடையெழுதும்போது சிவப்பு, பச்சை நிற மை பேனாக்களை பாவித்தலைத் தவிர்க்கவும்.
* விடைக்குரிய புள்ளிகளின் அளவு, காலம் என்பவற்றுக்கிடையில் காணப்படும் தொடர்புகளுக்கேற்ப நேர முகாமைத்துவத்தை பின்பற்றுதல் வேண்டும்.

**விசேட அறிவுருத்தல்கள் :**

1. வினாவுக்கான விடைகள் படிப்படியாக முன்வைக்கப்படல் வேண்டும்.
2. விடையளிக்கும் போது ஆயிரங்களில் முன்வைப்பதாயின் சகல தொகைகளும் ஆயிரங்களில் என்பதைக் குறிப்பிட வேண்டும். அதாவது ‘ரூபா 000’ என
3. ஒவ்வொரு வினாவுக்குமான முற்செய்கைகள் அந்தந்த வினாக்களுடன் முன்வைக்கப்படல் வேண்டும்.
4. வினாவின் உபபகுதிகள் காணப்படுமாயின், விடைக்குரிய உபபகுதி இலக்கத்தினை சரியாக குறிப்பிட்டு முன்வைத்தல் வேண்டும்.
5. வினாவின் உபபகுதிகள் காணப்படடமாயின், அதன் விடைகளை எல்லா இடங்களிலும் பரவலாக எழுதக் கூடாது.
6. இலக்கங்களைத் தெளிவாக எழுதுதல் வேண்டும்.
7. தான் பெற்ற விடையினைப் பயன்படுத்தி முழுமையான விடையினை வழங்குதல்.



Download Past Papers at : www.freebooks.lk

## 3.2. கற்றல் - கற்பித்தல் தொடர்பான கருத்துகளும் ஆலோசனைகளும் :

* பாடத்திட்டம், ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி, 1995 ஆம் 15 ஆம் இலக்கம் கொண்ட கணக்கீட்டு, கணக்காய்வு நியமச் சட்டம், 2007 ஆம் 07 ஆம் இலக்கம் கம்பனிச் சட்டம், உயர் தரத்திற்கு விதந்துரைக்கப்பட்ட கணக்கீட்டு நியமங்கள் தொடர்பில் கல்வி வெளியீட்டுத் திணைக்களம் வெளியிட்டுள்ள,

  (1) கணக்கீட்டு நியமங்களும், கம்பனிக் கணக்குகளும்

  (2) கிரய, முகாமைத்துவக் கணக்கீடு.

  என்பவை தொடர்பில் ஆசிரியர்களைப் போன்றே மாணவர்களும் அறிந்து கொள்வதுடன், அவற்றைப் பயன்படுத்துதலும் வேண்டும்.

* கணக்கீட்டு வினாப்பத்திரத்திற்கு விடையளிக்கும் போது வழங்கப்பட்டுள்ள பிரச்சினைகளை வெற்றிகரமாகத் தீர்ப்பதாயின் வகுப்பறைக் கற்றல் - கற்பித்தல் கருமங்களின் போது வணிக உலகில் நடைமுறை ரீதியிலான பிரச்சினைகளை அடிப்படையாகக் கொண்டு பயிற்சிகளை தயாரித்து வழங்கள் மிக முக்கியமாகும்.

* வாசித்தல், எழுதுதல் என்பவற்றில் காணப்படும் குறைபாடு காரணமாக வினாக்களை விளங்கிக் கொள்வதிலும் வெளிப்படுத்தும் திறனிலும் காணப்படும் பிரச்சினைகளை இழிவு படுத்திக் கொள்வதற்கான வேலைத்திட்டங்களை நடைமுறைப்படுத்துதல் வேண்டும்.

* நடைமுறை வணிக உலகில் பயன்படுத்தப்படுகின்ற முதன்மை ஆவணங்கள், கணக்கீட்டறிக்கைகள் என்பவற்றை வகுப்பறைக் கற்பித்தல் துணைச் சாதனங்களாக பயன்படுத்தி பாடத்தினை விருத்தி செய்வதற்குத் தேவையான அனுபவங்களை உறுதி செய்வதற்கு வழிகாட்டுதல் அவசியம்.

  உதாரணம் - மூல ஆவணங்கள்
  - வங்கிக் கூற்று
  - சம்பளப் பட்டியல்
  - இருப்பு அறிக்கை (இன்வென்றி அறிக்கை)
  - வருடாந்த அறிக்கை

* இப்பாடம் தனக்கு மாத்திரமன்றி சமூகத்திற்கும் சம அளவில் முக்கியத்துவமுடைய பாடமொன்றாகையால் சகல வேளைகளிலும் கற்றல் செயலொழுங்குகளை நல்ல விளக்கத்துடனும், தர்க்க ரீதியாகவும், மனதை ஈர்க்கும் வகையிலும் பாட அலகினை ஏன் கற்றல் வேண்டும் என்பது தொடர்பில் மாணவர்களின் மனதில் பதியும் வகையிலும் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகள் விருத்தி செய்யப்படல் வேண்டும்.

* இப்பாடமானது தீர்மானமெடுத்தலுக்கு முக்கியமான பாடமொன்றாக இருப்பதனால் ஒவ்வொரு பாட அலகுகளையும் கற்பிக்கும் போது கற்றல் உபகரணங்களையும், கருவிகளையும் பாவிப்பதனூடாக மகிழ்ச்சியான கற்றற் சூழலொன்றைக் கட்டியெழுப்புவதற்கும், திறன்களை விருத்தி செய்வதற்குமான சந்தர்ப்பத்தை பெற்றுக் கொடுத்தல் பொருத்தமானது.

* நவீன பாட அறிவினை விருத்தி செய்து கொள்வதற்கும், இற்றைப்படுத்துவதற்கும் தொடர்ச்சியாக செயற்படும் ஆசிரியர்கள், திறன்கள் நிறைந்த ஆக்கச்சக்தியுள்ள நபர்கள் என்பதுடன் அவர்கள் மாணவர் சமுதாயத்திற்கு பாரிய பங்களிப்பை வழங்குபவர்களுமாவர்.



Download Past Papers at : www.freebooks.lk

